بسم الله الرحمن الرحيم

# வரதட்சணை ஒரு வன்கொடுமை

## முன்னுரை

திருமணத்தின் போது மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டாரிடமிருந்து பெருந்தொகையை வரதட்சணையாகப் பெறுகின்றனர். இந்த கொடுமை இந்தியாவில் குறிப்பாக தமிழ்நாட்டிலும் கேரள மாநிலத்திலும் அதிகமாக உள்ளது. உலகில் வேறு எந்த நாட்டிலும் இல்லாத அளவுக்கு நம் நாட்டில் மட்டும் வரதட்சணைக் கொடுமை தலைவிரித்தாடுகின்றது.

வரதட்சணையால் பெண் இனமும் பெண்ணைப் பெற்றவர்களும் படும் துன்பங்களை ஒவ்வொரு நாளும் கண்கூடாக பார்த்துவருகிறோம். இஸ்லாமில் வரதட்சணை வாங்குவதற்கு கடுகளவு கூட அனுமதியில்லை. மனிதனை பாதிக்கும் எந்த செயலானாலும் அதை வன்மையாக கண்டிக்கின்ற மார்க்கம் இஸ்லாம். ஆண்மீக ரீதியில் இது போன்ற பாவங்களை கடுமையாக எதிர்க்கும் மார்க்கம் இஸ்லாமைத் தவிர வேறில்லை எனலாம்.

ஆனால் இஸ்லாமிய சமூகம் இஸ்லாமை சரியாக கடைபிடிக்காத காரணத்தால் வரதட்சணைக் கொடுமை நம் சமுதாயத்திலும் தலைவிரித்தாடுகின்றது. சொல்லப்போனால் மற்ற சமூகங்களை விட நம் சமூகத்தில் தான் அதிக அளவில் வரதட்சணை வாங்கப்படுகின்றது.

முஸ்லிம் அல்லாத மக்களிடம் இஸ்லாமைப் பற்றி நாம் எடுத்துச் சொல்லும் போது அவர்கள் அவர்கள் எழுப்புகின்ற சந்தேகங்களில் இதுவும் ஒன்று. முஸ்லிம்கள் வாங்கும் அளவுக்கு மற்ற சமூகங்களில் அதிக வரதட்சணை வாங்கும் பழக்கமில்லை. முஸ்லிம்கள் ஏன் அதிக வரதட்சணை வாங்குகிறார்கள்? என்று கேட்கின்றனர். இக்கேள்விக்கு இஸ்லாமிய சமுதாயம் என்ன பதில் சொல்ல முடியும்?

இவர்கள் இஸ்லாமை கடைபிடிக்காத காரணத்தால் இப்படிப்பட்ட கொடுமையான காரியத்தை செய்கிறார்கள் என்று கூறுவதைத் தவிர வேறு பதில் சொல்ல முடியாது. வரதட்சணையால் ஏற்படும் விளைவுகளையும் இது குறித்து இஸ்லாம் கூறுவதையும் மக்கள் அறியாத காரணத்தால் இந்த பாவத்தை சர்வசாதாரணமாக செய்கின்றனர். இன்று கணிசமான

மக்கள் இந்த பாவத்திலிருந்து மீண்டு வரதட்சணை வாங்காமல் நபிவழி அடிப்படையில் திருமணம் செய்கின்றனர்.

எனினும் பலர் இன்னும் இது பற்றிய தெளிவில்லாமலும் அச்சமில்லாமலும் இருக்கின்றனர். வரதட்சணை வாங்குவோருடன் ஒப்பிடுகையில் வரதட்சணை வாங்காமல் திருமணம் செய்வோரின் எண்ணிக்கை சமுதாயத்தில் மிகக் குறைவாகவே உள்ளது. எனவே வரதட்சணை பற்றி மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் நல்லெண்ணத்தில் இந்நூல் தொகுக்கப்பட்டுள்ளது.

வரதட்சணைக் கொடுமை தலைவிரித்தாடிய தமிழகத்தில் அதற்கு எதிராக பல மார்க்க அறிஞர்கள் பிரச்சாரம் செய்தார்கள். இவர்களில் சகோதரர் பீ.ஜெய்னுல் ஆபிதீன் அவர்கள் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவர்களின் உரையின் மூலமாக பலர் இப்பாவத்திலிருந்து விடுபட்டார்கள். வரதட்சணை வாங்காமல் திருமணம் செய்யும் ஒரு கூட்டம் உருவானது. அல்லாஹ் இவர்களுக்கு மகத்தான நற்கூலியை வழங்குவானாக!

இந்நூலை நாம் விற்பனை செய்யவில்லை. இதை படிக்கும் சகோதரர்களிடம் நாம் ஒன்றை மட்டுமே எதிர்பாக்கின்றோம். இதில் சொல்லப்பட்டுள்ள உபதேசங்களுக்கு தன்னை கட்டுப்படுத்திக்கொண்டு மற்றவர்களுக்கும் இதனை எடுத்துச்செல்ல வேண்டும் என்பதே நம்முடைய எதிர்பார்ப்பு. அல்லாஹ் நம் அனைவருக்கும் அருள்புரிவானாக!

**இப்படிக்கு**

**எஸ். அப்பாஸ் அலி எம்.ஐ.எஸ்.சி**

## பெண் இனம் வெறுக்கப்படுகின்றது

மனிதன் தான் வளர்க்கும் ஆடு மாடு போன்ற விலங்கினங்கள் பெண் குட்டியை பெற்றெடுத்தால் மகிழ்ச்சியடைகிறான். பெண் இனம் இனவிருத்தி செய்யும் என்பதால் எல்லா உயிரினங்களிலும் மனிதன் பெண் இனத்தை விரும்புகிறான்.

பெண்களால் சமுதாயத்திற்கு பல நன்மைகள் இருந்தாலும் மனித இனத்தில் மட்டும் பெண் குழந்தை பிறப்பதை சமுதாயத்தில் பலர் வெறுக்கின்றனர். பெண் குழந்தை பிறந்த

செய்தியை கேட்டவுடன் பலருக்கு முகம் சுருங்கிவிடுகின்றது. பெற்றெடுத்த தாய் கேவலமாக பார்க்கப்படுகிறாள். நோவினை செய்யப்படுகிறாள். வரதட்சணைக் கொடுமையே இதற்குக் காரணம்.

பெண் குழந்தை வளர்ந்து திருமணத்துக்கு தகுதியாகிவிட்டால் அவளை பெண் பேச வரும் மாப்பிள்ளை வரதட்சணை கேட்பான். அவன் கேட்கும் தொகையை கொடுக்காவிட்டால் பெண்ணைப் பார்த்துவிட்டு திருமணம் செய்ய முடியாது என்று கூறுவான்.

எனவே பெண் குழந்தை பிறந்துவிட்டால் அன்றிலிருந்து பெற்றோர்களுக்கு கவலை ஆரம்பமாகிவிடுகின்றது. சொகுசு வாழ்வை விட்டுவிட்டு தந்தை இரத்தத்தை வேர்வையாய் சிந்துவார். அவர் கொடுக்கும் பணத்தை தாய் சிறிது சிறிதாக சேமிப்பாள்.

மகள் பருவ வயதை அடைந்துவிட்ட செய்தி மகிழ்சி தரும் செய்தியாக இருந்தாலும் அதை நினைத்து அவளால் மகிழ முடியாது. திருமணத்துக்கு தகுதியாகிவிட்டாலே. இவளுடைய திருமணத்துக்கு என்ன தயார் செய்து வைத்துள்ளோம் என்று நினைத்து அழுகை வரும்.

தங்கையை கரை சேர்ப்பதற்காக அண்ணும் தன்னுடைய திருமண கணவை தியாகம் செய்து வெளிநாட்டுக்ச் சென்று படாதபாடு பட்டு சம்பாதிப்பான். இப்படி செல்பவர்களில் பல அண்ணன்மார்கள் வெளிநாட்டிலேயே மடிந்து ஊருக்கு வரும்போது ஜனாஸாவாக வரும் நிகழ்வுகளும் உண்டு.

**பிச்சையெடுக்கும் அவலம்**

இவ்வாறு பாடுபட்டு சேர்த்த பணம் போதாது என்று மிருகபுத்தியுள்ள மாப்பிள்ளை கூறினால் வெளியில் வட்டிக்கு கடன் வாங்கி வரதட்சணை கொடுக்க வேண்டி வரும். வட்டி கடனில் சிக்கிவிட்டால் காலம் முழுக்க கடனாளியாக இருந்து மரணிக்க வேண்டியது தான். இவன் வட்டி என்ற பெரும்பாவத்தில் விழுவதற்கு வரதட்சணையே காரணம்.

சொந்த வீடு வைத்திருப்பவன் மகளை கரைசேர்ப்பதற்காக அதை விற்று விட்டு நடுத்தெருவுக்கு வந்துவிடுவான். ஒன்றுமில்லாதவன் வேறு வழியில்லாமல் மானத்தை மறந்துவிட்டு ஒவ்வொரு பள்ளிவாசல்களாகச் சென்று பாவா குமர் காரியமாக வந்திருக்கின்றனே.

எனக்கு உதவி செய்யுங்கள் என்று பிச்சையெடுக்கும் அவலத்தை நம் நாட்டில் காணலாம். இந்த அவலத்திற்கு வரதட்சணையே காரணம்.

பிச்சையெடுக்க அஞ்சுபவன் திருமணம் ஆகாத தனது மகளை பார்த்துப் பார்த்து கண்ணீர் வடித்துக்கொண்டிருப்பான். பக்கத்து வீட்டுப் பெண்ணுக்கு திருமணம் முடிந்துவிட்டதே. அவளை விட வயதில் மூத்தவளான நமது மகளுக்கு திருமணம் செய்து வைக்க முடியவில்லையே என்று குமுறுவான்.

**விபச்சாரத்தில் தள்ளும் வரதட்சணை**

உரிய வயதில் திருமணம் ஆகாத காரணத்தால் பல பெண்கள் மனநோயாளியாக மாறுகிறார்கள். சிலர் நாம் ஏழையாக பிறந்துவிட்டோம். நமக்கு திருமணம் ஆகாது. நாம் ஏன் இழிவுடன் வாழ வேண்டும் என்று நினைத்து தற்கொலை செய்து தங்கள் வாழ்வை முடித்துக்கொள்கின்றனர். இவர்கள் இறைவன் மன்னிக்காத தற்கொலை என்ற பெரும் பாவத்தை செய்வதற்கு வரதட்சணையே காரணம்.

ஏழையாக பிறப்பது பாவமா? மனிதனின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றான இல்லறத் தேவை நமக்கு மட்டும் ஏன் மறுக்கப்படுகின்றது என திருமணத்துக்கு ஏங்கும் பெண் ஒரு நேரத்தில் விபச்சாரத்தில் சிக்கிவிடுகிறாள். படிதாண்டி வேறு மதத்தவர்களுடன் ஓடிப்போகிறாள். மரியாதையுடன் வாழ்ந்த பெற்றோர்களுக்கு இவளால் பெரிய அவமானம் ஏற்படும்.

மணவாழ்வு கிடைக்காது என்பதால் ஒருத்தி ஓடி விட்டால் அவளது குடும்பத்தில் எஞ்சியுள்ள பெண்களுக்கும் வாழ்வு கிடைக்காத நிலை ஏற்படும். இதிலும் வரதட்சணை கேட்பவர்களுக்குப் பங்கு இருக்கிறது. ஒழுக்கமுள்ளவள் விபச்சாரியாக மாறுவதற்கு இந்த வரதட்சணையே காரணம்.

சிரமப்பட்டு வரதட்சணை கொடுத்து திருமணத்தை நடத்திய பிறகும் பெண்ணைப் பெற்றவனுக்கு நிம்மதியில்லை. ருசி கண்ட பூனை சும்மா இருக்காது. வரதட்சணை வாங்கிப் பழகிய மானங்கெட்ட மாப்பிள்ளைக்கு மறுபடியும் மறுபடியும் பெண்வீட்டாரிடமிருந்து பிடுங்கத் தோணும். பணம் கேட்டு மனைவியை கொடுமை செய்வான். பெற்றோர்கள் நொந்து நூலாய் போய்வார்கள்.

## பெண் சிசு கொல்லப்படுகின்றது

பெண்ணை பெற்றவர்கள் இவ்வளவு கஷ்டங்களை பட வேண்டுமா? பெண்ணாகப் பிறந்தால் இப்படியெல்லாம் சீரழிய வேண்டுமா? பெண்ணாகப் பிறந்தால் இவ்வளவு வேதனைகள் நிச்சயம் என்றால் அப்படிப்பட்ட பெண் குழந்தை நமக்கு வேண்டாம் என்று பெண் குழந்தையை நஞ்சாய் சமுதாயம் வெறுக்கின்றது. பெண் இனத்தை கறுவருக்கும் இரக்கமற்ற செயலை செய்கின்றது.

பெண் சிசு என்று தெரிந்துவிட்டால் கருவிலேயே அந்த சிசுவை அழித்துவிடுகின்றனர் என்பதால் வயிற்றில் வளரும் சிசு ஆணா? பெண்ணா? என்பதை ஸ்கேன் மூலம் தெரிவிப்பதை அரசாங்கம் தடை செய்துள்ளது.

பிறந்த குழந்தையை குப்பைத் தொட்டியிலும் சாக்கடையிலும் வீசிச் செல்கின்றனர். கள்ளிப்பால் கொடுத்தும் இன்னும் நவீன முறைகளை பயன்படுத்தியும் கொடூரமான முறையில் கொலை செய்கின்றனர்.

## கருணையுள்ள தாயின் கொடூரச் செயல்

எல்லா உயிரினங்களிலும் பெற்றெடுத்த தாய் தன் குட்டியின் மீது அளவு கடந்த பாசம் கொண்டிருக்கும். தன் குஞ்சுகளுக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டால் தன்னுயிரை கூட பொருட்படுத்தாமல் தன்னால் இயன்றவரை எதிரியை எதிர்த்துப் போராடி தன் குஞ்சுகளை காப்பாற்றுகின்ற கருணையை அனைத்து உயிரிகளிடத்திலும் பார்க்க முடியும்.

ஆனால் மனித இனத்தில் மட்டும் பெற்றெடுத்த தாயே தன் குழந்தையை கொலை செய்கிறாள். இரக்கமுள்ள இவள் இப்படிப்பட்ட கள்நெஞ்சுக்காரியாக மாறுவதற்கு இந்த வரதட்சணையே காரணம். இந்தப் பாவங்கள் அனைத்திலும் வரதட்சணை வாங்கியவர்களுக்கும் ஒரு பங்கு நிச்சயமாக உள்ளது.

இப்படி ஏராளமான தீமைகளுக்கு முக்கிய காரணமாக உள்ள வரதட்சணையை வாங்குவோர், இவ்வளவு பாவங்களுக்கான தண்டனைக்காகத் தம்மை முன்பதிவு செய்கிறார்கள். நியாயத் தீர்ப்பு வழங்கக் கூடிய இறைவன் முன்னால் நாம் நிறுத்தப்படுவோம் என்ற அச்சம் கடுகளவாவது இருந்தால் எவரும் வரதட்சணை கேட்கவே மாட்டார்.

**அறியாமைக் காலத்தை நோக்கி...**

நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதராக வருவதற்கு முன்னால் அவர்களின் சமுதாய மக்கள் பெண் குழந்தைகளை கடுமையாக வெறுத்தனர். பெண் குழந்தை பிறப்பதை கேவலமாகக் கருதினர். பலர் தங்கள் குழந்தைகளை உயிருடன் மண்ணில் புதைத்து கொலையும் செய்தனர். இதை அல்லாஹ் பின்வரும் வசனத்தில் கண்டிக்கின்றான்.

وَإِذَا بُشِّرَ أَحَدُهُمْ بِالْأُنْثَى ظَلَّ وَجْهُهُ مُسْوَدًّا وَهُوَ كَظِيمٌ(58)يَتَوَارَى مِنَ الْقَوْمِ مِنْ سُوءِ مَا بُشِّرَ بِهِ أَيُمْسِكُهُ عَلَى هُونٍ أَمْ يَدُسُّهُ فِي التُّرَابِ أَلَا سَاءَ مَا يَحْكُمُونَ(59)16

அவர்களில் ஒருவனுக்குப் பெண் குழந்தை பற்றி நற்செய்தி கூறப்பட்டால் அவனது முகம் கருத்து, கவலைப்பட்டவனாக ஆகி விடுகிறான். அவனுக்குக் கூறப்பட்ட கெட்ட(தெனக் கருதிய) செய்தியினால் சமுதாயத்திலிருந்து மறைந்து கொள்கிறான். இழிவுடன் இதை வைத்துக் கொள்வதா? அல்லது மண்ணில் இதை (உயிருடன்) புதைப்பதா? (என்று எண்ணுகிறான்) கவனத்தில் கொள்க! அவர்கள் தீர்ப்பளிப்பது மிகவும் கெட்டது.

**அல்குர்ஆன் (16 : 58)**

கேடுகெட்ட கலாச்சாரத்தை கொண்டிருந்த அரபு மக்களிடத்தில் கூட வரதட்சணை கொடுமை இருக்கவில்லை. அவர்கள் வரதட்சணை கொடுமைக்கு பயந்து பெண்களை கொல்லவில்லை.

அரபுகள் பெண்களுக்கு வழங்க வேண்டிய உரிமைகளை வழங்காமல் அவர்களை ஆடு மாடுகளைப் போல் நடத்தினர். பெண் என்றால் விபச்சாரத்திற்கு மட்டும் பயன்படும் ஆயுதமாக அவளை பார்த்தனர். இதன் காரணத்தால் பெண் குழந்தையை இழிவாக கருதி கொலை செய்யும் நிலைக்கு சிலர் சென்றனர்.

இஸ்லாம் வந்த பிறகு பெண்களுக்கு கொடுக்க வேண்டிய உரிமைகளையும் கண்ணியத்தையும் கொடுத்து அவளும் மதிக்கப்பட வேண்டியவள் என்ற எண்ணத்தை ஏற்படுத்தி முன்பிருந்த நிலையை தலைகீழாக மாற்றியது.

இன்று நமது சமுதாயத்தில் உள்ள வரதட்சணை கொடுமையால் 1400 வருடங்களுக்கு முன்பு அரபுகளிடம் குடிகொண்டிருந்த பெண்குழந்தைகளை கொலை செய்யும் அறியாமைக்கால அநாச்சாரம் அப்படியே நமது நாட்டிலும் பெருகிவிட்டது.

**பெண் இனம் இல்லாவிட்டால்...**

தற்போது உலகில் ஆண்களை விட பெண்கள் அதிகமாக இருக்கின்றனர். எனவே தட்டுப்பாடு இல்லாமல் ஆண்களுக்கு வாழ்க்கைத் துணை இலகுவாக கிடைத்துவிடுகின்றது.

வரதட்சணைக் கொடுமையால் பெண் இனம் அழிக்கப்படுமேயானால் இந்த நிலை மாறி ஆண் இனம் மிகப்பெரிய நெருக்கடியை சந்திக்க நேரிடும். ஆண்களின் எண்ணிக்கை அதிகமாகி பெண்கள் குறைந்துவிடுவார்கள். பெண் துணை இல்லாமல் ஆண்வர்க்கம் அல்லோலபப்படும். இன்று வரதட்சணைக் கொடுமையால் பெண்கள் சந்திக்கும் அவலங்களை அந்த நேரத்தில் ஆண்கள் சந்திக்கும் நிலை ஏற்படும்.

**பிள்ளைகளிடம் பாரபட்சம்**

எல்லாவற்றிற்கும் வழி காட்டும் நம் மார்க்கம், தாய் தந்தையர் தமது பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்றும் வழி காட்டுகின்றது. பெற்றோர்கள் தமது பிள்ளைகளுக்கு எப்படி அன்பளிப்பு வழங்க வேண்டும் என்பதும் அந்த வழி காட்டல்களில் உள்ள ஒன்றாகும்.

நுஃமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் மிம்பரின் மீது நின்று கொண்டு பின்வருமாறு அறிவித்தார்கள்:

என் தந்தை அன்பளிப்பு ஒன்றை எனக்குக் கொடுத்தார். என் தாயார் அம்ரா பின்த் ரவாஹா (ரலி) அவர்கள் என் தந்தையிடம், “நீங்கள் இதற்கு அல்லாஹ்வின் தூதரை சாட்சியாக ஆக்காதவரை நான் இதை ஒப்புக் கொள்ள மாட்டேன்” என்று கூறினார்கள். என் தந்தை அல்லாஹ்வின் தூதரிடம் சென்று, “அல்லாஹ்வின் தூதரே! நான் அம்ரா பின்த் ரவாஹாவின் வாயிலாக எனக்குப் பிறந்த என் மகனுக்கு அன்பளிப்பு ஒன்றைக் கொடுத்தேன். அவள் (என் மனைவி) தங்களை சாட்சியாக ஆக்கும் படி எனக்குக் கட்டளையிட்டாள்” என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “உங்கள் மற்ற பிள்ளைகளுக்கும் இதே போன்று கொடுத்துள்ளீர்களா?” என்று கேட்டார்கள். அதற்கு என் தந்தை, “இல்லை” என்று பதிலளித்தார்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறெனில் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்! உங்கள் பிள்ளைகளிடையே நீதம் செலுத்துங்கள்" என்று கூறினார்கள். இதைக் கேட்ட என் தந்தை உடனே திரும்பி வந்து, அன்பளிப்பை ரத்து செய்தார்.

**அறிவிப்பவர்: ஆமிர் பின் ஷர்ஹபீல்,**

**நூல்: புகாரி 2587**

மற்றொரு அறிவிப்பில், "நான் அக்கிரமத்துக்கு சாட்சியாக இருக்க மாட்டேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

நீதமாக நடந்து கொள்ளுங்கள்! நீதம் தவறினால் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! பாவத்திற்கு என்னை சாட்சியாளனாக ஆக்காதீர்கள் என்ற நபி (ஸல்) அவர்களின் வார்த்தைகள், பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு மத்தியில் வழங்கும் அன்பளிப்புகளில் நூல் பிடித்தாற்போல் நடக்க வேண்டும் என்பதைக் காட்டுகின்றன.

ஆனால் நடைமுறையில் பிள்ளைகளுக்கு மத்தியில் பெற்றோர்கள் அன்பளிப்பு விஷயத்தில் மிக அதிகமாகவே பாரபட்சம் காட்டுகின்றனர். குறிப்பாக, பெண் மக்களுக்கு திருமணத்தின் போது நகை வடிவத்தில் வழங்குகின்ற அன்பளிப்பைப் போன்று ஆண் மக்களுக்கு வழங்குவதில்லை. பெண் மக்களுக்கு மத்தியிலேயே மூத்த மகளுக்கு ஒரு விதம், இளைய மகளுக்கு மற்றொரு விதம் என்று அவர்களுக்கு அளிக்கும் நகை, நிலம், சீர் வரிசைகளில் வேறுபாடுகள் காட்டுவது சர்வ சாதாரணமாக நடக்கின்றது.

இந்த வேறுபாட்டை பெற்றோர்கள் தாங்களாகவும் செய்கின்றார்கள்; வரக் கூடிய மாப்பிள்ளைகள் வைக்கும் கோரிக்கைக்குத் தக்கவும் இந்த வேறுபாட்டைச் செய்கின்றார்கள். இங்கு தான் வரதட்சணையின் முதல் விபரீதத்தை, மோசமான விளைவுகளை நாம் பார்க்கிறோம்.

பிள்ளைகளுக்கு மத்தியில் தாங்களாக வேறுபாடு காட்டினாலும், மாப்பிள்ளைகளின் நிர்பந்தத்தால் வேறுபாடு காட்டினாலும் அல்லாஹ்விடத்தில் அந்தப் பெற்றோர்கள் நிச்சயமாகக் குற்றவாளிகள் தான்! தாங்களாகவே வேறுபாடு காட்டினால் பெற்றோர்கள் அப்பாவத்திற்கு முழுப் பொறுப்பாளி ஆகின்றார்கள். மாப்பிள்ளைகளின் நிர்பந்தத்தால் வேறுபாடு காட்டினால்

பெற்றோருடன் சேர்த்து மாப்பிள்ளைகளும் அல்லாஹ்விடம் பதில் சொல்ல வேண்டிய நிலைக்கு ஆளாகின்றார்கள்.

"அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! நீதமாக நடங்கள்! என்னைப் பாவத்திற்கு சாட்சியாக்காதீர்கள்!" என்ற நபி (ஸல்) அவர்களின் கடுமையான வார்த்தைப் பிரயோகங்களை கருத்தில் கொண்டு பாருங்கள். இந்த வரதட்சணைக் கொடுமை எந்த அளவுக்குப் பெற்றோர்களை தங்கள் பிள்ளைகள் விஷயத்தில் நீதம் தவற வைக்கின்றது? எனவே வரதட்சணை வாங்கக் கூடியவர்கள் இந்தப் பாவத்திற்காகவும் அல்லாஹ்விடம் தண்டனை பெற்றாக வேண்டும்.

**பாகப் பிரிவினையில் அநீதம்**

வரதட்சணை வாங்குவதால் ஏற்படும் தீமைகளில் மிக மோசமான தீமை, பெண்களுக்குக் கிடைக்க வேண்டிய சொத்துக்களை அவர்களுக்குப் போய் சேர விடாமல் தடுப்பதாகும். நாங்கள் எங்கே தடுக்கின்றோம் என்று வரதட்சணை வாங்குபவர்கள் கேட்கலாம். அதற்கான விளக்கம் இதோ!

பொதுவாக சொத்துக்கள் பங்கு வைக்கப்படுவது, சொத்தின் உரிமையாளர் இறந்த பிறகு தான்! ஆனால் வரதட்சணைக் கொடுமை இங்கும் அநியாயமாகப் பாய்கின்றது. மாப்பிள்ளைகள், பெண்ணைப் பெற்ற தகப்பனிடம் நகை, தொகை, நஞ்சை, புஞ்சை என்று கோருகின்றனர். தகப்பனார் தனது மகளுக்காக தான் உயிருடன் இருக்கும் காலத்தில் மேற்கண்டவற்றை அன்பளிப்பாகக் கொடுத்து திருமணம் முடித்து வைக்கின்றார். தகப்பனார் இறந்ததும், அவரது சொத்துக்கள் பாகப்பிரிவினை சட்டப்படி அந்தப் பெண்ணுக்கும் சொத்துக்களின் உரிய பங்கு போய் சேர வேண்டும். ஆனால் நடைமுறையில் அவ்வாறு சேர்கின்றதா என்றால் இல்லை!

பெண்ணின் சகோதரர்கள் அவளை அழைத்து, உனக்கு திருமணம் செய்யும் போது அதிகமான பணம் வரதட்சணையாக கொடுக்கப்பட்டதுவிட்டது. எனவே உனக்கு சொத்தில் எந்த பங்கும் இல்லை என்று பேசி அப்பெண்ணுக்குச் சேர வேண்டிய சொத்தை அநியாயமாக அபகரித்து விடுகின்றார்கள். ஒரு சில ஊர்களில் பெண்கள் சொத்தில் பங்கு கேட்பதே பாவம் என்று பெண்களே நினைக்கின்றார்கள். இந்தக் கொடுமை தமிழக முஸ்லிம்களிடத்தில் பரவலாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது.

வரதட்சணையை காரணம் காட்டி அந்தப் பெண்ணின் சொத்துரிமை பரிக்கப்படுகின்றது. பாகப்பிரிவினையைப் பற்றி அல்லாஹ் தன் திருமறையில் சொல்லி விட்டுக் கூறுவதைக் கவனியுங்கள்!

இவை அல்லாஹ்வின் வரம்புகள். அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கட்டுப்படுவோரை சொர்க்கச் சோலைகளில் அவன் நுழையச் செய்வான். அவற்றின் கீழ்ப்பகுதியில் ஆறுகள் ஓடும். அதில் நிரந்தரமாக இருப்பார்கள். இதுவே மகத்தான வெற்றி. அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் மாறு செய்து அவனது வரம்புகளை மீறுபவனை நரகில் நுழையச் செய்வான். அதில் அவன் நிரந்தரமாக இருப்பான். அவனுக்கு இழிவு தரும் வேதனை உண்டு.

**(அல்குர்ஆன் 4:13,14)**

அல்லாஹ்வின் இந்த வரம்புகளை மீறினால் இப்படி மீறுபவர்கள் நிரந்தர நரகத்தை அடைவார்கள் என்று கூறுகின்றான்.

வரதட்சணை வாங்குவது பெண்களின் சொத்துக்களைப் பறிக்கும் அளவுக்குக் கொண்டு செல்கின்றது. சொத்துக்களைப் பறிப்பது அல்லாஹ்வின் வரம்புகளை மீறுவதாகும். அல்லாஹ்வின் வரம்புகளை மீறுவது நிரந்தர நரகத்திற்குக் கொண்டு செல்கின்றது. இப்படி நிரந்தர நரகத்தைப் பெற்றுத் தரும் இந்த வரதட்சணையை வாங்க வேண்டுமா? என்று மக்களே சிந்தியுங்கள்.

ஆண் பெண்ணுக்கு கொடுப்பதே அல்லாஹ் இந்த உலகத்தில் ஏற்படுத்தியுள்ள பொது நியதியாகும். பெண்ணிடமிருந்து வாங்குவது மிருகம் கூட செய்யாத இழி செயலாகும்.

மஹர் என்று இஸ்லாம் கூறும் இந்த அழகிய செயல் நமது நாட்டிலும் ஆரம்பகாலத்தில் வழக்கில் இருந்துள்ளது. சமீபத்தில் சில வருடங்களாகத் தான் வரதட்சணைக் கொடுமை புற்றுநோய் போல் நம் நாட்டில் மூலை முடுக்குகளில் எல்லாம் பரவியுள்ளது.

## வரதட்சணை கேவலமான செயல்

பெண்ணுக்கு கொடுத்து திருமணம் செய்ய வேண்டிய ஆண் அந்த பெண்ணிடம் வாங்குவது கேவலமான செயலாகும். ஒரு பிச்சைக்காரன் உதவி கேட்டு வருகிறான். அவன்

கையில் வைத்திருக்கும் பாத்திரத்தில் சில நாணயங்கள் கிடக்கின்றது. அவனுக்கு உதவி செய்ய வருவதாக ஒருவன் கூறிக்கொண்டு பிச்சைக்காரன் தட்டில் கிடக்கும் நாணயங்களை எடுத்துக்கொள்கிறான் என்றால் இவன் எவ்வளவு பெரிய கேவலத்தை தனக்கு ஏற்படுத்திக்கொள்கிறான்? வரதட்சணை வாங்குவோரும் இதைத் தான் செய்கின்றனர்.

பெண்ணுக்கு கொடுத்து திருமணம் செய்ய வேண்டிய ஆண் அந்த பெண்ணிடமிருந்து வாங்குகிறான் என்றால் மேலே நாம் சொன்ன உதாரணத்திற்கும் இதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

ஆனால் இப்படிப்பட்ட கேவலமான செயலை சமுதாயத்தில் பலர் பெருமையாக பேசிக்கொள்கின்றனர். திருமணம் ஆன மாப்பிள்ளையைப் பார்த்தால் பெண்வீட்டாரிடம் எவ்வளவு வாங்கினாய்? என்று வெட்கமில்லாமல் கேட்கின்றனர். வரதட்சணை வாங்கியவனும் மானமில்லாமல் உன்னை விட அதிகமாகவே வரதட்சணை வாங்கி இருக்கின்றேன் என்று பெருமையாக கூறுகிறான்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் திருமணம் செய்த ஒரு நபித்தோழரை நபி (ஸல்) அவர்கள் பார்த்தபோது முதலில் நபி (ஸல்) அவர்கள் அந்த நபித்தோழரிடம் நீ மணப்பெண்ணுக்கு எவ்வளவு மஹர் கொடுத்தாய்? என்று கேட்டார்கள். அதற்கு அவர் பேரீச்சம் பழக் கொட்டை அளவு தங்கத்தை மஹராக கொடுத்தேன் என்று கூறினார். இவ்வாறு திருமணம் செய்வது தான் ஆண்மகனுக்கு கண்ணியமாகும்.

2049حَدَّثَنَا أَحْمَدُ بْنُ يُونُسَ حَدَّثَنَا زُهَيْرٌ حَدَّثَنَا حُمَيْدٌ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَدِمَ عَبْدُ الرَّحْمَنِ بْنُ عَوْفٍ الْمَدِينَةَ فَآخَى النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بَيْنَهُ وَبَيْنَ سَعْدِ بْنِ الرَّبِيعِ الْأَنْصَارِيِّ وَكَانَ سَعْدٌ ذَا غِنًى فَقَالَ لِعَبْدِ الرَّحْمَنِ أُقَاسِمُكَ مَالِي نِصْفَيْنِ وَأُزَوِّجُكَ قَالَ بَارَكَ اللَّهُ لَكَ فِي أَهْلِكَ وَمَالِكَ دُلُّونِي عَلَى السُّوقِ فَمَا رَجَعَ حَتَّى اسْتَفْضَلَ أَقِطًا وَسَمْنًا فَأَتَى بِهِ أَهْلَ مَنْزِلِهِ فَمَكَثْنَا يَسِيرًا أَوْ مَا شَاءَ اللَّهُ فَجَاءَ وَعَلَيْهِ وَضَرٌ مِنْ صُفْرَةٍ فَقَالَ لَهُ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَهْيَمْ قَالَ يَا رَسُولَ اللَّهِ تَزَوَّجْتُ امْرَأَةً مِنْ الْأَنْصَارِ قَالَ مَا سُقْتَ إِلَيْهَا قَالَ نَوَاةً مِنْ ذَهَبٍ أَوْ وَزْنَ نَوَاةٍ مِنْ ذَهَبٍ قَالَ أَوْلِمْ وَلَوْ بِشَاةٍ رواه البخاري

அனஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் அவர்கள் நறுமணப் பொருளின் (மஞ்சள்) கறையுடன் (நபியவர்களிடம்) வந்தார்கள். அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் "என்ன விசேஷம்?" எனக் கேட்டார்கள். அதற்கவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! நான் ஒரு அன்ஸாரிப் பெண்ணை மணமுடித்துக்கொண்டேன்!" என்றார்கள். நபி (ஸல்) "அவருக்கு என்ன மணக்கொடை (மஹ்ர்) கொடுத்தீர்?" எனக் கேட்டார்கள். "ஒரு பேரீச்சங் கொட்டை எடைக்குத் தங்கம்!" என அப்துர்ரஹ்மான் (ரலி) அவர்கள் பதிலளித்தார்கள். அதற்கு, "ஓர் ஆட்டையேனும் (அறுத்து வலீமா-) மணவிருந்தாக அளிப்பீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**நூல் : புகாரி (2049)**

## ஆண்மகனுக்கு அழகல்ல

அல்லாஹ் இயற்கையாகவே பெண்களை விட ஆண்களை உடல் வலிமையுள்ளவர்களாக ஆக்கியுள்ளான். வெளியில் சென்று பொருளாதாரத்தை திரட்டுவதற்கு ஏற்ற உடல் அமைப்பை ஆண்களுக்கு மட்டுமே வழங்கியுள்ளான்.

எனவே ஆண் பலவீனமான படைப்பான பெண்ணுக்கு கொடுத்து திருமணம் முடித்தால் தான் அவன் உண்மையான ஆண்மகன். ஆண் பொருளாதாரத்தை பெண்ணுக்கு வழங்குகிறான் என்ற காரணத்துக்காகவே அல்லாஹ் பெண்ணை விட ஆணுக்கு கூடுதல் அதிகாரத்தை வழங்கியுள்ளான்.

الرِّجَالُ قَوَّامُونَ عَلَى النِّسَاءِ بِمَا فَضَّلَ اللَّهُ بَعْضَهُمْ عَلَى بَعْضٍ وَبِمَا أَنفَقُوا مِنْ أَمْوَالِهِمْ (4(34

சிலரை விட மற்றும் சிலரை அல்லாஹ் சிறப்பித்திருப்பதாலும், ஆண்கள் தமது பொருட்களைச் செலவிடுகிறார்கள் என்பதாலும் ஆண்கள், பெண்களை நிர்வாகம் செய்பவர்கள்.

**அல்குர்ஆன் (4 : 34)**

அல்லாஹ் மேற்கண்ட வசனத்தில் ஆண்களுக்கு குறிப்பிடும் சிறப்பை வரதட்சணை வாங்கும் மாப்பிள்ளைகள் இழந்துவிடுகிறார்கள். பெண்ணிடம் வாங்குவதால் இவன் பெண்ணை விட தாழ்ந்துவிடுகிறான். குடும்பத்தை நிர்வகிக்கும் தகுதியையும் இழந்துவிடுகிறான். இவன் உடலளவில் மட்டும் ஆணாக இருப்பதால் இவன் முழுமையான ஆண்மகன் அல்ல.

எனவே தான் நபி (ஸல்) அவர்கள் திருமணத்தின் போது ஆண் பெண்ணுக்கு கொடுப்பதை கட்டாயமாக ஆக்கினார்கள். மிகவும் வலியுறுத்தியுள்ளார்கள். இதை பின்வரும் சம்பவத்தில் அறியலாம்.

5029حَدَّثَنَا عَمْرُو بْنُ عَوْنٍ حَدَّثَنَا حَمَّادٌ عَنْ أَبِي حَازِمٍ عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ قَالَ أَتَتْ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ امْرَأَةٌ فَقَالَتْ إِنَّهَا قَدْ وَهَبَتْ نَفْسَهَا لِلَّهِ وَلِرَسُولِهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ مَا لِي فِي النِّسَاءِ مِنْ حَاجَةٍ فَقَالَ رَجُلٌ زَوِّجْنِيهَا قَالَ أَعْطِهَا ثَوْبًا قَالَ لَا أَجِدُ قَالَ أَعْطِهَا وَلَوْ خَاتَمًا مِنْ حَدِيدٍ فَاعْتَلَّ لَهُ فَقَالَ مَا مَعَكَ مِنْ الْقُرْآنِ قَالَ كَذَا وَكَذَا قَالَ فَقَدْ زَوَّجْتُكَهَا بِمَا مَعَكَ مِنْ الْقُرْآنِ رواه البخاري

5029 சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தம்மை (அர்ப்பணித்து) அன்பளிப்புச் செய்துவிட்டதாகக் கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “(இனி) எனக்கு எந்தப் பெண்ணும் தேவையில்லை” என்று சொன்னார்கள். அப்போது அங்கிருந்த ஒரு மனிதர் “இந்தப் பெண்ணை எனக்கு மணமுடித்து வையுங்கள்!” என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், “ஏதேனும் ஆடையொன்றை அவளுக்கு (‘மஹ்ர்’ எனும் விவாகக் கொடையாக)க் கொடு!” என்று (அந்த மனிதரிடம்) சொன்னார்கள். அவர், “என்னிடம் இல்லை” என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், “அவளுக்கு (எதையேனும் மஹ்ராகக்) கொடு! அது இரும்பாலான மோதிரமாக இருந்தாலும் சரியே” என்று சொன்னார்கள். இதைக் கேட்டு அந்த மனிதர் கலங்கினார். எனவே, நபி (ஸல்) அவர்கள், “குர்ஆனிலிருந்து உன்னிடம் என்ன (அத்தியாயம் மனனமாக) இருக்கிறது?” என்று கேட்டார்கள். அவர் இன்ன இன்ன அத்தியா யங்கள் (எனக்கு மனப்பாடமாக) உள்ளன” என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், “உம்முடன் இருக்கும் குர்ஆன் அத்தியா யங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்து வைத்தேன்” என்று சொன்னார்கள்.

**நூல் : புகாரி (5029)**

**மஹர் ஏன் கொடுக்க வேண்டும்?**

திருமணம் செய்வதற்காக மணமகன் மணமகளுக்கு வழங்கும் பொருள் மஹர் (மணக் கொடை) எனப்படும்.

ஒரு பெண் திருமண வாழ்வின் மூலம் தனக்கு ஏற்படும் இழப்புகளைக் கருத்தில் கொண்டு எவ்வளவு வேண்டுமானாலும் மஹர் கேட்பதற்கு உரிமை உள்ளது. அதை அவள் மட்டுமே உடமையாக வைத்துக் கொள்வதற்கும் உரிமை உள்ளது.

இல்லற வாழ்க்கையில் அதிகமான இழப்புக்கு ஆளாவது பெண்கள் தான். தங்களின் அழகையும், இளமையையும் இழந்த பின் அவர்கள் விவாகரத்துச் செய்யப்படக் கூடும். அந்த நிலையை எல்லாம் எண்ணிப் பார்த்து மஹர் தொகையைத் தீர்மானிக்கும் உரிமையை பெண்களுக்கு இஸ்லாம் வழங்குகின்றது.

மஹர் தொகையை எவ்வளவு வேண்டுமானாலும் பெண்கள் கேட்கலாம். இவ்வளவு தான் கேட்க வேண்டும் என்று வரையறை செய்யும் உரிமை எவருக்கும் இல்லை.

இஸ்லாம் பெண்களுக்கு வழங்கியுள்ள இந்த உரிமையைப் பெண்கள் பயன்படுத்தத் தவறிவிட்டதால் அவர்களின் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. இவர்கள் மஹர் கேட்காததால் ஆண்கள் வரதட்சனை கேட்கும் கொடுமை அதிகமாகி விட்டது.

கொடுக்கக் கடமைப்பட்ட ஆண்கள் கேட்டுப் பெறக் கூடிய அளவுக்கு மானமிழந்து விட்டனர். வரதட்சணை வாங்காதீர்கள் என்பதை விட நீங்கள் கொடுங்கள் என்பது கடுமையான கட்டளையாகும். உண்மையான எந்த முஸ்லிமும் வரதட்சணை கேட்கத் துணிய மாட்டான். இது தான் அறிவுப்பூர்வமானதும், நேர்மையானதுமாகும்.

பெண்கள் தாம் அதிகமான தியாகத்தைச் செய்கின்றனர். அதிகமான சிரமங்களையும் சுமக்கின்றனர். எனவே பெண்களுக்கு ஆண்கள் கொடுப்பது தான் நீதியாகும்.

– ஒரு ஆணுக்கும், பெண்ணுக்கும் திருமணம் நடந்த பின் ஆண் தனது வீட்டிலேயே இருக்கிறான். தனது தாய், தந்தையர் மற்றும் உறவினருடன் இருக்கிறான். ஆனால் அவனை விட வயதில் குறைந்த பெண் தனது பெற்றோரையும், சொந்தங்களையும் துறந்து விட்டு கணவன் வீட்டுக்கு வந்து விடுகிறாள். இந்தத் தியாகத்திற்காக பெண்களுக்குத் தான் ஆண்கள் வழங்க வேண்டும்.

– திருமணத்திற்குப் பின் மனைவிக்காக கணவன் எந்தச் சேவையும் செய்வதில்லை. அதிகபட்சமாக அவளது வாழ்க்கைச் செலவினங்களுக்குப் பொறுப்பேற்றுக் கொள்கிறான்.

ஆனால் பெண்கள் கணவனுக்காக சமைத்தல், உடைகளைத் துவைத்தல், வீட்டைப் பராமரித்தல், கணவனுக்கு மட்டுமின்றி கணவனின் உறவினர்களுக்கும் சேர்த்து பணிவிடை செய்தல் என்று ஏராளமான சுமைகளைத் தம் தலையில் சுமந்து கொள்கின்றனர். மாமியார் கொடுமைகளையும் சில பெண்கள் கூடுதலாக தாங்கிக் கொள்ள வேண்டியுள்ளது. இந்தக் காரணத்துக்காகவும் ஆண்கள் தாம் பெண்களுக்குக் கொடுக்க வேண்டும்.

- இல்லறத்தில் ஈடுபட்டு ஒரு பெண் கருவுற்றால் ஆணுக்கு இதனால் எந்தச் சிரமமும், சுமையும் இல்லை. பெண்தான் சிரமப்படுகிறாள். அவள் எதையும் உண்ண முடியாத மசக்கை நிலையை அடைகிறாள். இயல்பாக நடக்கவும், படுக்கவும் முடியாத சிரமத்தைத் தாங்கிக் கொள்கிறாள். அத்துடன் மரணத்தின் வாசல் கதவைத் தட்டி விட்டு பிரசவித்து மீள்கிறாள். இந்த ஒரு காரணத்துக்காகவே அவளுக்கு கோடி கொடுத்தாலும் போதாது.

- பிரசவித்த பின் குழந்தைக்காக தந்தை எதையும் செய்வதில்லை. பாலூட்டுவதும், சீராட்டுவதும், கண் தூங்காது கவனிப்பதும் என ஏராளமான சுமைகளும் அவள் மீது தான் சுமத்தப்பட்டுள்ளன. இந்தக் காரணத்திற்காகவும் ஆண்கள் பெண்களுக்கு மஹர் கொடுப்பது தான் நேர்மையானது.

- அடுத்தடுத்து குழந்தைகள் பிறந்து விட்டால் பெண் தனது எல்லா வசந்தங்களையும் துறந்து விடும் நிலையை அடைகிறாள். எனவே தான் ஆண்கள் பெண்களுக்கு மஹர் கொடுக்க வேண்டும் என்று அல்லாஹ் வலியுறுத்துகிறான்.

وَآتُوا النِّسَاءَ صَدُقَاتِهِنَّ نِحْلَةً فَإِنْ طِبْنَ لَكُمْ عَنْ شَيْءٍ مِنْهُ نَفْسًا فَكُلُوهُ هَنِيئًا مَرِيئًا(4)4

பெண்களுக்கு அவர்களின் மணக் கொடைகளை கட்டாயமாகக் கொடுத்து விடுங்கள்! அவர்களாக மனமுவந்து அதில் எதையேனும் விட்டுத் தந்தால் மனநிறைவுடனும், மகிழ்வுடனும் அதை உண்ணுங்கள்!

**அல்குர்ஆன் (4 : 4)**

### எவ்வளவு கொடுத்தாலும் தகும்

குடும்ப வாழ்க்கையில் பெண்கள் மிகப்பெரிய சிரமங்களை அனுபவித்து பல தியாகங்களை செய்கின்றனர். எனவே ஆண் பெண்ணுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் மஹர் கொடுக்கலாம். மணப்பெண் மாப்பிள்ளையிடம் எவ்வளவு வேண்டுமானாலும் மஹர் கேட்கலாம்.

குவியல் போன்று பெரும் செல்வத்தை மஹராக கொடுத்தாலும் அது தகும் என்று பின்வரும் வசனத்தல் அல்லாஹ் சுட்டிக்காட்டுகிறான்.

وَإِنْ أَرَدْتُمْ اسْتِبْدَالَ زَوْجٍ مَكَانَ زَوْجٍ وَآتَيْتُمْ إِحْدَاهُنَّ قِنطَارًا فَلَا تَأْخُذُوا مِنْهُ شَيْئًا أَتَأْخُذُونَهُ بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا(4(20

ஒரு மனைவியை விவாக ரத்துச் செய்து, இன்னொருத்தியை மணந்து கொள்ள நீங்கள் விரும்பினால் அவளுக்கு ஒரு குவியலையே கொடுத்திருந்தாலும் அதில் எதையும் பிடுங்கிக் கொள்ளாதீர்கள்! அக்கிரமமாகவும், பெரும் குற்றமாகவும் உள்ள நிலையில் அதைப் பிடுங்கிக் கொள்கிறீர்களா?

**அல்குர்ஆன் (4 : 20)**

நபி மூசா (அலை) அவர்கள் பிறருக்கு தொண்டு செய்வதில் அக்கரை உள்ள நல்ல வாலிபராக இருந்தார்கள். அவர்கள் ஒரு பெண்ணை திருமணம் செய்யும் போது அந்த பெண்ணுடைய தந்தை மூசா தன்னிடம் 8 வருடங்கள் வேலை செய்ய வேண்டும். விரும்பினால் பத்து வருடம் கூட வேலை செய்யலாம் என்று இதை மஹராக மூசா நபியிடம் கேட்டார். மூசா (அலை) அவர்களும் இதை ஏற்று நீண்ட காலம் வேலை செய்து தனது மஹரை நிறைவேற்றினார்கள்.

قَالَ إِنِّي أُرِيدُ أَنْ أُنكِحَكَ إِحْدَى ابْنَتَيَّ هَاتَيْنِ عَلَى أَنْ تَأْجُرَنِي ثَمَانِيَةَ حِجَجٍ فَإِنْ أَتْمَمْتَ عَشْرًا فَمِنْ عِنْدِكَ وَمَا أُرِيدُ أَنْ أَشُقَّ عَلَيْكَ سَتَجِدُنِي إِنْ شَاءَ اللَّهُ مِنْ الصَّالِحِينَ (27 : 28)

“எட்டு ஆண்டுகள் நீர் எனக்குக் கூலி வேலை செய்ய வேண்டும் என்ற நிபந்தனையின் அடிப்படையில் எனது இந்த இரு புதல்விகளில் ஒருத்தியை உமக்கு மண முடித்துத் தருகிறேன்.

பத்து ஆண்டுகளாக முழுமையாக்கினால் (அது) உம்மைச் சேர்ந்தது. நான் உமக்குச் சிரமம் தர விரும்பவில்லை. அல்லாஹ் நாடினால் என்னை நல்லவராகக் காண்பீர்" என்று அவர் கூறினார்.

**அல்குர்ஆன் (28 : 27)**

எனவே ஆண் பெண்ணுக்கு எவ்வளவு மஹர் கொடுத்தாலும் அதை இஸ்லாம் வரவேற்கின்றது. இதை ஆர்வமூட்டுகின்றது. பெண்ணுக்கு தராளமாக கொடுக்க வேண்டும் என்று சொன்ன மார்க்கத்தில் இருந்துகொண்டு பெண்ணிடமிருந்து ஏராளமாக வாங்குவது எவ்வளவு பெரிய பாவம்? என்பதை சமுதாயம் உணர வேண்டும்.

நம் நாட்டில் சில சுன்னத் ஜமாத் ஆலிம்கள் லட்சக்கணக்கில் வரதட்சணை வாங்கும் திருமணங்களுக்கு தலைமை ஏற்று நடத்துகின்றனர். இந்தத் திருமணங்களில் மாப்பிள்ளையிடமிருந்து பெண்ணுக்கு இவர்கள் வாங்கிக் கொடுக்கும் மஹர் தொகையோ வெறும் 101 ரூபாய். பாவப்பட்ட பெண் இனத்தை வேண்டுமானால் இப்படி இவர்கள் ஏமாற்ற முடியும். வல்ல ரஹ்மானை இவர்களால் ஏமாற்ற முடியாது. இதற்கு கட்டாயம் அவர்கள் அல்லாஹ்விடம் பதில் சொல்ல வேண்டும்.

## பெண்ணுரிமை பறிக்கப்படுகின்றது

மணக்க விரும்பும் ஆணிடம் பெண் எவ்வளவு வேண்டுமானாலும் மஹர் கேட்கலாம். இந்த உரிமையை இஸ்லாம் பெண்களுக்கு அளித்துள்ளது. இந்த உரிமைக்கு பங்கம் வரும் திருமண முறைகளை நபி (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

இரண்டு நபர்களில் ஒவ்வொருவருக்கும் சகோதரி உள்ளது. இவர்களில் ஒருவர் மற்றவரின் சகோதரியை திருமணம் செய்யும் முடிவுக்கு வருகின்றனர். இப்போது இருவரும் மஹர் கொடுக்கும் நிலை ஏற்படுகின்றது. இந்நிலையில் என் சகோதரிக்கு நீ மஹர் தர வேண்டியதில்லை. உன் சகோதரிக்கு நான் மஹர் தரமாட்டேன் என்று பேசிக்கொள்ளும் முறைக்கு ஷிகார் என்று அரபியில் சொல்லப்படுகின்றது. இந்தத் திருமண முறையை நபி (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள்.

6960حَدَّثَنَا مُسَدَّدٌ حَدَّثَنَا يَحْيَى بْنُ سَعِيدٍ عَنْ عُبَيْدِ اللَّهِ قَالَ حَدَّثَنِي نَافِعٌ عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ نَهَى عَنْ الشِّغَارِ قُلْتُ لِنَافِعٍ مَا الشِّغَارُ قَالَ يَنْكِحُ ابْنَةَ الرَّجُلِ وَيُنْكِحُهُ ابْنَتَهُ بِغَيْرِ صَدَاقٍ وَيَنْكِحُ أُخْتَ الرَّجُلِ وَيُنْكِحُهُ أُخْتَهُ بِغَيْرِ صَدَاقٍ رواه البخاري

6960 உபைதுல்லாஹ் அல்உமரீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:

நாஃபிஉ (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஷிஃகார் முறைத் திருமணத்தை தடை செய்தார்கள்" என்று அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று என்னிடம் தெரிவித்தார்கள். உடனே நான் நாஃபிஉ அவர்களிடம், "ஷிஃகார் (முறைத் திருமணம்) என்றால் என்ன?" என்று கேட்டேன். அவர்கள், "ஒருவர் மணக்கொடை (மஹ்ர்) ஏதுமில்லாமல் இன்னொருவரின் மகளை மணந்துகொண்டு (அதற்கு பதிலாக) அவருக்குத் தன் மகளை மணமுடித்துவைப்பதாகும். அவ்வாறே மணக்கொடை ஏதுமில்லாமல் ஒருவர் மற்றொருவரின் சகோதரியை மணந்து கொண்டு (அதற்கு பதிலாக) அவருக்குத் தன் சகோதரியை மணமுடித்துவைப்பதாகும்" என்று பதிலளித்தார்கள்.

**நூல் : புகாரி (6960)**

ஷிகார் என்ற இந்த திருமண முறையில் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்கின்றனர். இது தவறில்லை என்பது போல் தோன்றினாலும் பெண்ணுக்கு இஸ்லாம் வழங்கியுள்ள ஒரு உரிமை இங்கு பரிக்கப்படுவதாலே இதை நபியவர்கள் தடைசெய்கிறார்கள்.

மஹர் எவ்வளவு வாங்க வேண்டும்? வாங்கலாமா? அல்லது தள்ளுபடி செய்யலாமா? என்று முடிவு செய்யும் அதிகாரம் பெண்ணுக்கு மாத்திரமே உள்ளது. இந்த உரிமை ஷிகார் என்ற திருமண முறையில் இல்லை என்பதால் இஸ்லாம் இதை தடைசெய்கின்றது.

மஹர் விசயத்தில் இஸ்லாம் பெண்களுக்கு வழங்கியுள்ள இந்த உரிமை நம் சமூகப் பெண்களுக்கு கிடைப்பதில்லை. வரதட்சணைக் கொடுமையால் வதங்கிய பெண்கள் தனக்கு வரும் மாப்பிள்ளை மஹர் கொடுக்காவிட்டாலும் பரவாயில்லை. நம்மிடம் வரதட்சணை கேட்காமல் இருந்தாலே பெரும் பாக்கியம் என்று நிம்மதி பெருமூச்சு விடுகின்றனர்.

எனவே வரதட்சணைக் கொடுமை பெண்களை பயமுறுத்தி அவர்களின் உரிமையை கேட்டுப் பெறவிடாமல் தடுக்கின்றது.

**மனைவி ஹலால் இல்லை**

அந்நிய ஆணும் அந்நியப் பெண்ணும் திருமணம் எனும் ஒப்பந்தத்தின் மூலம் அவர்களில் ஒருவர் இன்னொருவருக்கு ஹலால் ஆகின்றார்கள். இந்தத் திருமணத்தில் மஹர் என்ற மணக்கொடையை ஆண் பெண்ணுக்கு வழங்கினாலே அவனுக்கு அவள் ஆகுமானவள்.

வியாபாரியிடமிருந்து ஒரு பொருளை வாங்கும்போது அந்தப் பொருளுக்குரிய தொகையை கொடுத்து வாங்கினால் தான் அந்த பொருள் நமக்கு சொந்தமாகும். பணம் கொடுக்காமல் பொருளையும் வாங்கிவிட்டு பொருளைக் கொடுத்தவனிடத்தில் பணத்தையும் கேட்பது எவ்வளவு பெரிய அநியாயம்? இதை விட மிகப் பெரிய கொள்ளை ஏதுமில்லை. வரதட்சணை வாங்குவோர் இது போன்ற கொள்ளையடிக்கும் வேலையை செய்து தான் திருமண வாழ்வை துவங்குகின்றனர். எனவே இவர்கள் மனைவியிடம் வாங்கியதை திருப்பிக்கொடுத்து மஹரையும் முறையாக ஒப்படைக்காதவரை மனைவி இவர்களுக்கு ஹலால் ஆகமாட்டாள்.

பெண்ணுக்கு கொடுக்க வேண்டியதை கொடுத்தால் தான் அந்தப் பெண் ஆணுக்கு ஆகுமானவள் என்பதை பின்வரும் குர்ஆன் வசனமும் நபிமொழியும் கூறுகின்றது.

وَلَا جُنَاحَ عَلَيْكُمْ أَنْ تَنكِحُوهُنَّ إِذَا آتَيْتُمُوهُنَّ أُجُورَهُنَّ (60(10

அவர்களுக்குரிய (மணக்) கொடைகளை நீங்கள் வழங்கினால் அவர்களை நீங்கள் மணந்து கொள்வது உங்கள் மீது குற்றமில்லை.

**அல்குர்ஆன் (60 : 10)**

2721حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ حَدَّثَنَا اللَّيْثُ قَالَ حَدَّثَنِي يَزِيدُ بْنُ أَبِي حَبِيبٍ عَنْ أَبِي الْخَيْرِ عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَحَقُّ الشُّرُوطِ أَنْ تُوفُوا بِهِ مَا اسْتَحْلَلْتُمْ بِهِ الْفُرُوجَ رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகளில் முதன்மையானது யாதெனில், உங்கள் மனைவியரை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்களாக ஆக்கிக் கொள்வதற்காக நீங்கள் தரும் 'மஹ்ர்' தான். இதை உக்பா பின் ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**நூல் : புகாரி (2721)**

**பெரும்பாவத்தை விட கொடியது**

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் திருமணத்தின் போது பெண்ணிடமிருந்து வரதட்சணை வாங்கும் நடைமுறை இல்லாத காரணத்தால் வரதட்சணை கூடாது என்று நேரடியாக குர்ஆன் ஹதீஸில் சொல்லப்படவில்லை. ஆனால் மஹர் தொடர்பான வசனங்களை கவனிக்கும் போது வரதட்சணை பெரும்பாவங்களில் ஒன்று என்பதை அறிய முடியும்.

திருமணத்தின் போது மணமகன் மணப்பெண்ணுக்கு கொடுக்கும் மணத்தொகைக்கு மஹர் என்று கூறப்படும். ஒரு ஆண்மகன் இந்த மஹரை மனைவியிடம் கொடுத்த பிறகு அதை திரும்பப் பெறுவது ஹராமான செயல் என்று குர்ஆன் வன்மையாக கண்டிக்கின்றது.

وَلَا يَحِلُّ لَكُمْ أَنْ تَأْخُذُوا مِمَّا آتَيْتُمُوهُنَّ شَيْئًا (2 :229)

மனைவியருக்கு நீங்கள் கொடுத்தவற்றிலிருந்து எந்த ஒன்றையும் திரும்பப் பெறுவதற்கு அனுமதி இல்லை.

**அல்குர்ஆன் (2 : 229)**

மனைவிக்கு கொடுத்த மஹரை ஆண் திரும்பப் பெறுவது அக்கிரமம் என்றும் பெரும்பாவம் என்றும் அல்லாஹ் எச்சரிக்கின்றான்.

وَإِنْ أَرَدْتُمُ اسْتِبْدَالَ زَوْجٍ مَكَانَ زَوْجٍ وَآتَيْتُمْ إِحْدَاهُنَّ قِنْطَارًا فَلَا تَأْخُذُوا مِنْهُ شَيْئًا أَتَأْخُذُونَهُ بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا (20) وَكَيْفَ تَأْخُذُونَهُ وَقَدْ أَفْضَى بَعْضُكُمْ إِلَى بَعْضٍ وَأَخَذْنَ مِنْكُمْ مِيثَاقًا غَلِيظًا (21)4

ஒரு மனைவியை விவாக ரத்துச் செய்து, இன்னொருத்தியை மணந்து கொள்ள நீங்கள் விரும்பினால் அவளுக்கு ஒரு குவியலையே கொடுத்திருந்தாலும் அதில் எதையும் பிடுங்கிக்

கொள்ளாதீர்கள்! அக்கிரமமாகவும், பெரும் குற்றமாகவும் உள்ள நிலையில் அதைப் பிடுங்கிக் கொள்கிறீர்களா?

உங்களிடம் கடுமையான உடன்படிக்கையை அவர்கள் எடுத்து, நீங்கள் ஒருவர் மற்றவருடன் இரண்டறக் கலந்து விட்ட நிலையில் எப்படி நீங்கள் அதைப் பிடுங்கிக் கொள்ள முடியும்?

**அல்குர்ஆன் (4 : 21)**

பெண்ணுக்கு கொடுத்த பொருளை அவளிடமிருந்து பிடுங்குவது பெரும்பாவம் என்றால் இவன் கொடுக்காத பொருளை வரதட்சணையாக வாங்குவது எவ்வளவு பெரிய பாவம் என்பதை சமுதாயம் சிந்திக்க வேண்டும்.

## மஹர் கொடுப்பது ஆண்களுக்கு சிரமத்தை ஏற்படுத்தாதா?

திருமணத்தின் போது ஆண்கள் பெண்களிடமிருந்து வரதட்சணை வாங்குவதை இஸ்லாம் மார்க்கம் தடை செய்கிறது. இதற்கு மாறாக மாப்பிள்ளை பெண்ணுக்கு மஹர் கொடுக்க வேண்டும் என்று கட்டளையிடுகின்றது. இது ஆண்களுக்கு சிரமத்தை ஏற்படுத்தாதா? என்ற சந்தேகம் சிலருக்கு வரலாம்.

கொடுப்பது எப்போதுமே கஷ்டமானது தான். இதில் எந்தச் சந்தேகமும் இல்லை. மனைவிக்குச் சோறு போடுவதும் உடைகள் மற்றும் அணிகலன்கள் எடுத்துக் கொடுப்பதும் கூட ஆண்களுக்குக் கஷ்டமானது தான். அதற்காக ஆண்கள் மீது அந்தச் சுமையைச் சுமத்தக் கூடாது என்று யாரும் கூற மாட்டோம்.

இதில் கஷ்டத்தைக் கவனத்தில் கொள்வதை விட நியாயத்தைத் தான் கவனத்தில் கொள்ள வேண்டும். சைக்கிள் வாங்குவதை விட கார் வாங்குவது கஷ்டமானது என்பதால் நாம் கார் வாங்காமல் இருப்பதில்லை. கார் மூலம் கிடைக்கும் கூடுதல் வசதி மற்றும் சொகுசுக்காகக் கஷ்டத்தைப் பின்னுக்குத் தள்ளி விடுகிறோம். அது போல் தான் திருமண வாழ்க்கையின் மூலம் ஆண்கள் அதிக வசதியையும், சொகுசையும் இன்பத்தையும் அனுபவிக்கிறார்கள்.

சிறிது நேரம் இருவரும் இன்பத்தை அனுபவிப்பதில் மட்டும் சமமாக உள்ளனர். பின்விளைவுகளைச் சுமப்பதில் சமமாக இல்லை.

இவனது கருவைச் சுமப்பதால் அவள் படும் சிரமங்களை எண்ணிப் பார்க்க வேண்டும். பிரசவிக்கும் சிரமம், குடும்பத்தாருக்கு சேவை செய்யும் சிரமம் என ஏராளமான துன்பங்களைப் பெண்கள் தான் சுமக்கிறார்கள். ஆணுக்குச் சுகம் மட்டுமே கிடைக்கிறது. எனவே மஹர் கொடுப்பது அவனுக்குச் சிரமமாக இருந்தாலும் அவன் கொடுக்க வேண்டும் என்ற நியாயத்தைப் புறக்கணிக்க முடியாது.

**இஸ்லாம் வரதட்சணைக்கு எதிரான மாாக்கம்**

பிறருக்கு நோவினை செய்யாதவனே முஸ்லிம் என்று இஸ்லாம் கூறுகின்றது. வரதட்சணையால் பலர் நேரடியாகவும் மறைமுகமாகவும் நோவினைப்படுகிறார்கள். எனவே வரதட்சணை வாங்குபவர்கள் உண்மை முஸ்லிமாக இருக்க முடியாது.

6484 حَدَّثَنَا أَبُو نُعَيْمٍ حَدَّثَنَا زَكَرِيَّاءُ عَنْ عَامِرٍ قَالَ سَمِعْتُ عَبْدَ اللَّهِ بْنَ عَمْرٍو يَقُولُ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الْمُسْلِمُ مَنْ سَلِمَ الْمُسْلِمُونَ مِنْ لِسَانِهِ وَيَدِهِ وَالْمُهَاجِرُ مَنْ هَجَرَ مَا نَهَى اللَّهُ عَنْهُ رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

எவருடைய நாவு மற்றும் கையி(ன் தொல்லைகளி)லிருந்து பிற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருக்கிறார்களோ அவரே (உண்மையான) முஸ்லிம் ஆவார். எவர் அல்லாஹ் தடைவிதித்தவற்றிலிருந்து விலகிக் கொண்டாரோ அவரே (உண்மையான) முஹாஜிர் (துறந்தவர்) ஆவார்.

இதை அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**நூல் : புகாரி (6484)**

**புனிதம் பாழ்படுத்தப்படுகின்றது**

ஒரு முஸ்லிமுடைய உயிரும் உடைமையும் பொருளும் புனிதமானவை என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். கஃபா எவ்வாறு புனிதமானதோ அது போன்று இவையும்

புனிதமானவை. வரதட்சணை வாங்குவோர் ஒரு முஸ்லிமுடைய பொருளை அநியாயமாக அபகரித்து உடலளவிலும் மனதளவிலும் அவனை காயப்படுத்தி இந்த புனிதத்தை பாழ்படுத்திவிடுகின்றனர்.

4403حَدَّثَنَا يَحْيَى بْنُ سُلَيْمَانَ قَالَ أَخْبَرَنِي ابْنُ وَهْبٍ قَالَ حَدَّثَنِي عُمَرُ بْنُ مُحَمَّدٍ أَنَّ أَبَاهُ حَدَّثَهُ عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ كُنَّا نَتَحَدَّثُ بِحَجَّةِ الْوَدَاعِ وَالنَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بَيْنَ أَظْهُرِنَا وَلَا نَدْرِي مَا حَجَّةُ الْوَدَاعِ فَحَمِدَ اللَّهَ وَأَثْنَى عَلَيْهِ ثُمَّ ذَكَرَ الْمَسِيحَ الدَّجَّالَ فَأَطْنَبَ فِي ذِكْرِهِ وَقَالَ مَا بَعَثَ اللَّهُ مِنْ نَبِيٍّ إِلَّا أَنْذَرَ أُمَّتَهُ أَنْذَرَهُ نُوحٌ وَالنَّبِيُّونَ مِنْ بَعْدِهِ وَإِنَّهُ يَخْرُجُ فِيكُمْ فَمَا خَفِيَ عَلَيْكُمْ مِنْ شَأْنِهِ فَلَيْسَ يَخْفَى عَلَيْكُمْ أَنَّ رَبَّكُمْ لَيْسَ عَلَى مَا يَخْفَى عَلَيْكُمْ ثَلَاثًا إِنَّ رَبَّكُمْ لَيْسَ بِأَعْوَرَ وَإِنَّهُ أَعْوَرُ عَيْنِ الْيُمْنَى كَأَنَّ عَيْنَهُ عِنَبَةٌ طَافِيَةٌ أَلَا إِنَّ اللَّهَ حَرَّمَ عَلَيْكُمْ دِمَاءَكُمْ وَأَمْوَالَكُمْ كَحُرْمَةِ يَوْمِكُمْ هَذَا فِي بَلَدِكُمْ هَذَا فِي شَهْرِكُمْ هَذَا أَلَا هَلْ بَلَّغْتُ قَالُوا نَعَمْ قَالَ اللَّهُمَّ اشْهَدْ ثَلَاثًا وَيْلَكُمْ أَوْ وَيْحَكُمْ انْظُرُوا لَا تَرْجِعُوا بَعْدِي كُفَّارًا يَضْرِبُ بَعْضُكُمْ رِقَابَ بَعْضٍ رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

“அறிந்து கொள்ளுங்கள். உங்களது இந்த நகரத்தில், உங்களது இந்த மாதத்தில் உங்களது இந்த நாள் எப்படிப் புனிதமானதாக விளங்குகின்றதோ அவ்வாறே அல்லாஹ் உங்களுக்கு உங்கள் இரத்தங்களையும் உங்கள் செல்வங்களையும் புனிதமானவையாக ஆக்கியுள்ளான்” என்று நபி (ஸல்) அவர்கள் சொல்லிவிட்டு, “நான் (இறைச்செய்தியை உங்களிடம்) சேர்த்துவிட்டேனா?” என்று கேட்டார்கள். மக்கள், “ஆம் (சேர்த்து விட்டீர்கள்)” என்று பதிலளித்தனர்.

இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**நூல் : புகாரி (4403)**

**சகோதரத்துவம் அழிகின்றது**

ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமுக்கு சகோதரனாவான். தன்னுடன் பிறந்த சகோதரனிடத்தில் நாம் எப்படி அன்புடன் நடந்துகொள்கின்றோமோ அது போன்ற நம்முடன் பிறவாத இஸ்லாமியர்களிடத்தல் நல்ல முறையில் நடக்க வேண்டும் என்று இஸ்லாம் வலியுறுத்துகின்றது.

2442 حَدَّثَنَا يَحْيَى بْنُ بُكَيْرٍ حَدَّثَنَا اللَّيْثُ عَنْ عُقَيْلٍ عَنْ ابْنِ شِهَابٍ أَنَّ سَالِمًا أَخْبَرَهُ أَنَّ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَخْبَرَهُ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ لَا يَظْلِمُهُ وَلَا يُسْلِمُهُ وَمَنْ كَانَ فِي حَاجَةِ أَخِيهِ كَانَ اللَّهُ فِي حَاجَتِهِ وَمَنْ فَرَّجَ عَنْ مُسْلِمٍ كُرْبَةً فَرَّجَ اللَّهُ عَنْهُ كُرْبَةً مِنْ كُرُبَاتِ يَوْمِ الْقِيَامَةِ وَمَنْ سَتَرَ مُسْلِمًا سَتَرَهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்:

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு அநீதியிழைக்கவும் மாட்டான்; அவனை (பிறரது அநீதிக்கு ஆளாகும்படி) கைவிட்டு விடவும் மாட்டான். எவர் தன் சகோதரனின் தேவையை நிறைவு செய்வதில் ஈடு பட்டிருக்கின்றாரோ அவரது தேவையை நிறைவு செய்வதில் அல்லாஹ்வும் ஈடுபட்டிருக்கின்றான். எவர் ஒரு முஸ்லிமின் ஒரு துன்பத்தை நீக்குகின்றாரோ அவரை விட்டு அல்லாஹ்வும் மறுமை நாளின் துன்பங் களில் ஒரு துன்பத்தை நீக்குகின்றான். எவர் ஒரு முஸ்லிமின் குறைகளை மறைக்கின்றாரோ அவரது குறைகளை மறுமை நாளில் அல்லாஹ்வும் மறைக்கின்றான்.

இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

**நூல் : புகாரி (2442)**

வரதட்சணை வாங்குவது இஸ்லாம் கூறும் சகோதரத்துவத்திற்கு நேர் எதிரானதாகும். வீட்டுக்குப் புதிதாக வரும் மணப்பெண்ணிடம் வரதட்சணை கேட்டுத் துன்புறுத்தினால் அவளுடைய உள்ளத்தில் கணவனைப் பற்றியும் கணவனின் உறவினர்களைப் பற்றியும் கெட்ட மதிப்பீடு ஏற்படும். இதன் காரணத்தால் அவள் பிற்காலத்தில் மாமனார் மாமியாரை பழிவாங்கும் என்னத்துடன் செயல்படுவாள்.

மாப்பிள்ளை பெண்ணிடம் கை நீட்டி பணம் வாங்கியதால் பெண் செய்யும் தவறுகளை அவனால் கண்டிக்க முடியாத நிலை ஏற்படும். எனவே வரதட்சணை வாங்குவது குடும்நலத்திற்கு பங்கம் விளைவிக்கும் செயலாகும்.

**குழந்தையின் சாட்சி**

வரதட்சணைக்கு பயந்து பெற்றோர்களால் கொல்லப்படும் குழந்தைகளிடம் அல்லாஹ் மறுமை நாளில் நீ எதற்காக கொல்லப்பட்டாய்? என்று கேட்பான். அந்தக் குழந்தை வரதட்சணை கொடுமைக்காக என்னை கொன்றார்கள் என்று கூறும்.

வரதட்சணை வாங்கியவர்கள் கொடுத்தவர்கள் துணை நின்றவர்கள் கொலை செய்தவர்கள் என அனைவருக்கு எதிராகவும் அந்தக் குழந்தை இறைவனிடம் முறையிடும். இறைவன் இவர்களை நரகில் தள்ளி இந்தக் குழந்தைக்கு சரியான நீதியை வழங்குவான்.

وَإِذَا الْمَوْءُودَةُ سُئِلَتْ(8)بِأَيِّ ذَنْبٍ قُتِلَتْ(9)81

என்ன பாவத்துக்காக கொல்லப் பட்டாள் என்று உயிருடன் புதைக்கப்பட்டவள் விசாரிக்கப்படும் போது,

**அல்குர்ஆன் (81 : 8)**

**பாதிக்கப்பட்டவர்களின் பிரார்த்தனை**

சமுதாயத்தில் வரதட்சணையால் ஏற்படும் பாதிப்புகளையும் கொடுமைகளையும் அன்றாடம் செய்தித்தாள்களில் தினந்தோறும் பார்க்கின்றோம். இது வன்கொடுமை என்பதால் அரசாங்கம் மற்ற குற்றத்தைக் காட்டிலும் இந்தக் குற்றத்தை தடுப்பதற்காக கடுமையான சட்டங்களை வகுத்துள்ளது.

வரதட்சணை வாங்குவோருக்கு எதிராக அவர்களால் பாதிப்புக்குள்ளானவர்கள் அல்லாஹ்விடம் கையேந்திவிட்டால் பாதிக்கப்பட்டவரின் பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான். இறைவன் நினைத்தால் இந்த உலகத்திலேயே அவர்களுக்கு இழிவை கொடுப்பான்.

2448 حَدَّثَنَا يَحْيَى بْنُ مُوسَى حَدَّثَنَا وَكِيعٌ حَدَّثَنَا زَكَرِيَّاءُ بْنُ إِسْحَاقَ الْمَكِّيُّ عَنْ يَحْيَى بْنِ عَبْدِ اللَّهِ بْنِ صَيْفِيٍّ عَنْ أَبِي مَعْبَدٍ مَوْلَى ابْنِ عَبَّاسٍ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بَعَثَ مُعَاذًا إِلَى الْيَمَنِ فَقَالَ اتَّقِ دَعْوَةَ الْمَظْلُومِ فَإِنَّهَا لَيْسَ بَيْنَهَا وَبَيْنَ اللَّهِ حِجَابٌ رواه البخاري

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அநீதியிழைக்கப்பட்டவரின் சாபத்திற்கு (உங்களால் அநீதிக்கு ஆளானவர் இறைவனிடம் உங்கள் அநீதியைக் குறித்து முறையிட்டு உங்களுக்குக் கேடாகப் பிரார்த்தனை புரிபவதைப் பற்றி) அஞ்சுங்கள். ஏனெனில், அதற்கும் அல்லாஹ்வுக்கும் இடையே எந்தத் திரையும் இல்லை" என்று நபி (ஸல்) அவர்கள் முஆத் (ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு (ஆளுநராக) அனுப்பி வைத்த போது கூறினார்கள்.

**புகாரி (2448)**

## இறைவன் கருணைகாட்ட மாட்டான்

மக்களிடம் கருணையுடன் நடந்தால் தான் இறைவனின் கருணை நமக்கு கிடைக்கும். வரதட்சணை வாங்கி பெண் வீட்டாரை கொடுமைபடுத்தினால் இறைவன் நமக்கு கருணை காட்ட மாட்டான். நாம் மற்றவர்களிடம் நடந்துகொள்ளும் விதத்தில் தான் இறைவன் நம்மிடம் நடந்துகொள்கிறான்.

7376 حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ سَلَامٍ حَدَّثَنَا أَبُو مُعَاوِيَةَ عَنْ الْأَعْمَشِ عَنْ زَيْدِ بْنِ وَهْبٍ وَأَبِي ظَبْيَانَ عَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَا يَرْحَمُ اللَّهُ مَنْ لَا يَرْحَمُ النَّاسَ رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மனிதர்கள் மீது கருணைகாட்டாதவனுக்கு அல்லாஹ் கருணைகாட்ட மாட்டான்.

இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**புகாரி (7376)**

## ஹராமான பொருள்

அடுத்தவர் பொருளை தவறான முறையில் உண்ணுவதை அல்லாஹ் தடைசெய்துள்ளான். வரதட்சணை பெண்வீட்டாரை நிர்பந்தப்படுத்தி வாங்கப்படும் மோசடி என்பதால் இதுவும் ஹராமான (தடைசெய்யப்பட்ட) பொருளாகும்.

وَلَا تَأْكُلُوا أَمْوَالَكُمْ بَيْنَكُمْ بِالْبَاطِلِ وَتُدْلُوا بِهَا إِلَى الْحُكَّامِ لِتَأْكُلُوا فَرِيقًا مِنْ أَمْوَالِ النَّاسِ بِالْإِثْمِ وَأَنْتُمْ تَعْلَمُونَ (188)2

உங்களுக்கிடையே (ஒருவருக் கொருவர்) உங்கள் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்! தெரிந்து கொண்டே மக்களின் பொருட்களில் ஒரு பகுதியைப் பாவமான முறையில் சாப்பிடுவதற்காக அதிகாரிகளிடம் உங்கள் பொருட்களைக் கொண்டு செல்லாதீர்கள்!

**அல்குர்ஆன் (2 : 188)**

செல்வத்தை எப்படி சம்பாதித்தாய்? என்று அல்லாஹ் மறுமையில் ஒவ்வொருவரிடமும் கேட்பான். ஆகுமான வழியில் சம்பாதித்தவர்கள் இந்த விசாரணையில் தப்பித்துக்கொள்வர்கள். வரதட்சணை போன்ற ஹராமான முறையில் செல்வத்தை பெற்றவர்கள் இறைவனிடம் மாட்டிக்கொள்வார்கள்.

## எதிராக சாட்சி கூறும் பொருள்

வரதட்சணையாக வாங்கப்பட்ட பொருள் அதை வாங்கியவருக்கு எதிராக மறுமை நாளில் சாட்சி சொல்லும்.

1465كَمَا قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَإِنَّهُ مَنْ يَأْخُذُهُ بِغَيْرِ حَقِّهِ كَالَّذِي يَأْكُلُ وَلَا يَشْبَعُ وَيَكُونُ شَهِيدًا عَلَيْهِ يَوْمَ الْقِيَامَةِ رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு முஸ்லிம், தன்செல்வத்திருந்து ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கும்வரை அது அவனுக்குச் சிறந்த தோழனாகும். யார் முறையின்றி அதை எடுத்துக் கொள்கின்றானோ -- அவன் உண்டும் வயிறு நிரம்பாதவனைப் போன்றவனாவான். மேலும் மறுமை நாளில் அந்தச் செல்வம் அவனுக்கு எதிராக சாட்சியம் சொல்லும்" எனக் கூறினார்கள்.

**புகாரி (1465)**

**சுமையாக மாறும் பொருள்**

வரதட்சணையாக வாங்கப்படும் பொருள் மறுமை நாளில் அதை வாங்கியவருக்கு மிகப்பெரிய சுமையாக இருக்கும். உலகத்தில் இதை வாங்காமல் இருந்தால் நன்றாய் இருக்குமே என்று நினைத்து கைசேதப்படும் அளவுக்கு சிறிய பொருள் கூட பெரும் மலையாக மாறி அவனுக்கு சுமையை கொடுக்கும்.

2452حَدَّثَنَا أَبُو الْيَمَانِ أَخْبَرَنَا شُعَيْبٌ عَنْ الزُّهْرِيِّ قَالَ حَدَّثَنِي طَلْحَةُ بْنُ عَبْدِ اللَّهِ أَنَّ عَبْدَ الرَّحْمَنِ بْنَ عَمْرِو بْنِ سَهْلٍ أَخْبَرَهُ أَنَّ سَعِيدَ بْنَ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ مَنْ ظَلَمَ مِنْ الْأَرْضِ شَيْئًا طُوِّقَهُ مِنْ سَبْعِ أَرَضِينَ رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

எவர் பிறரது நிலத்தில் ஒரு பகுதியை அபகரித்துக் கொண்டாரோ அவர் ஏழு நிலங்களை (மறுமையில்) கழுத்தில் மாலையாகக் கட்டித் தொங்க விடப்படுவார்.

இதை சயீத் பின் ஸைத் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்

**நூல் : புகாரி (2452)**

**பரகத் இல்லாத பொருள்**

வரதட்சணையாக வாங்கப்படும் பொருளில் பரகத் என்ற இறைவனுடைய அருள் இருக்காது. உண்டும் வயிறு நிரம்பாதவனைப் போன்ற திருப்தியற்ற நிலையிலேயே வரதட்சணை வாங்கியவர்கள் இருப்பார்கள்.

6427حَدَّثَنَا إِسْمَاعِيلُ قَالَ حَدَّثَنِي مَالِكٌ عَنْ زَيْدِ بْنِ أَسْلَمَ عَنْ عَطَاءِ بْنِ يَسَارٍ عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَإِنَّ هَذَا الْمَالَ حُلْوَةٌ مَنْ أَخَذَهُ بِحَقِّهِ وَوَضَعَهُ فِي حَقِّهِ فَنِعْمَ الْمَعُونَةُ هُوَ وَمَنْ أَخَذَهُ بِغَيْرِ حَقِّهِ كَانَ كَالَّذِي يَأْكُلُ وَلَا يَشْبَعُ

رواه البخاري

அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த (உலகின்) செல்வம் இனிமையான தாகும். யார் இதை உரிய முறையில் சம்பாதித்து உரிய முறையில் செலவிடுகின்றாரோ அவருக்கு அது

நல்லுதவியாக அமையும். யார் இதை முறையற்ற வழிகளில் சம்பாதிக்கின்றாரோ அவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவராவார் என்று கூறினார்கள்.

**நூல் : புகாரி (6427)**

1472و حَدَّثَنَا عَبْدَانُ أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ أَخْبَرَنَا يُونُسُ عَنْ الزُّهْرِيِّ عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ وَسَعِيدِ بْنِ الْمُسَيَّبِ أَنَّ حَكِيمَ بْنَ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ سَأَلْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَأَعْطَانِي ثُمَّ سَأَلْتُهُ فَأَعْطَانِي ثُمَّ سَأَلْتُهُ فَأَعْطَانِي ثُمَّ قَالَ يَا حَكِيمُ إِنَّ هَذَا الْمَالَ خَضِرَةٌ حُلْوَةٌ فَمَنْ أَخَذَهُ بِسَخَاوَةِ نَفْسٍ بُورِكَ لَهُ فِيهِ وَمَنْ أَخَذَهُ بِإِشْرَافِ نَفْسٍ لَمْ يُبَارَكْ لَهُ فِيهِ كَالَّذِي يَأْكُلُ وَلَا يَشْبَعُ الْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنْ الْيَدِ السُّفْلَى رواه البخاري

ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

நான் நபி(ஸல்) அவர்களிடம் (உதவி) கேட்டேன். அவர்கள் எனக்கு வழங்கினார்கள்; மீண்டும் (உதவி) கேட்டேன் வழங்கினார்கள். மீண்டும் கேட்டேன்; வழங்கிவிட்டு, "ஹகீமே! நிச்சயமாக இந்தச் செல்வம் பசுமையானதும் இனிமையானதுமாகும். யார் இதைப் போதுமென்ற உள்ளத்துடன் எடுத்துக்கொள்கிறாரோ அவருக்கு இதில் வளம் ஏற்படுத்தப்படும்; யார் இதைப் பேராசையுடன் எடுத்துக்கொள்கின்றாரோ அவருக்கு அதில் வளம் ஏற்படுத்தப்படாது. அவன் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவன் போலாவான். உயர்ந்த கை தாழ்ந்த கையைவிடச் சிறந்தது" என்று கூறினார்கள்.

**நூல் : புகாரி (1472)**

**பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படாது**

வரதட்சணை பணத்தை வாங்கி உண்டவர்களின் பிரார்த்தனை ஏற்கப்படாது. அல்லாஹ் தடை செய்த இது போன்ற வழிகளில் சம்பாதித்தவர்கள் கஃபாவிற்கு சென்று பிரார்த்தனை செய்தாலும் அவர்களின் கோரிக்கையை இறைவன் நிராகரித்துவிடுகிறான்.

1686و حَدَّثَنِي أَبُو كُرَيْبٍ مُحَمَّدُ بْنُ الْعَلَاءِ حَدَّثَنَا أَبُو أُسَامَةَ حَدَّثَنَا فُضَيْلُ بْنُ مَرْزُوقٍ حَدَّثَنِي عَدِيُّ بْنُ ثَابِتٍ عَنْ أَبِي حَازِمٍ عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَيُّهَا النَّاسُ إِنَّ اللَّهَ طَيِّبٌ لَا يَقْبَلُ إِلَّا طَيِّبًا وَإِنَّ اللَّهَ أَمَرَ الْمُؤْمِنِينَ بِمَا أَمَرَ بِهِ الْمُرْسَلِينَ فَقَالَ يَا أَيُّهَا الرُّسُلُ كُلُوا مِنْ الطَّيِّبَاتِ وَاعْمَلُوا صَالِحًا إِنِّي بِمَا تَعْمَلُونَ عَلِيمٌ وَقَالَ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ ثُمَّ ذَكَرَ

الرَّجُلَ يُطِيلُ السَّفَرَ أَشْعَثَ أَغْبَرَ يَمُدُّ يَدَيْهِ إِلَى السَّمَاءِ يَا رَبِّ يَا رَبِّ وَمَطْعَمُهُ حَرَامٌ وَمَشْرَبُهُ حَرَامٌ وَمَلْبَسُهُ حَرَامٌ وَغُذِيَ بِالْحَرَامِ فَأَنَّى يُسْتَجَابُ لِذَلِكَ رواه مسلم

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரைப் பற்றிச் சொன்னார்கள். “அவர் தலைவிரி கோலத்துடனும் புழுதி படிந்த நிலையிலும் நீண்ட பயணம் மேற் கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி ‘என் இறைவா, என் இறைவா’ என்று பிரார்த்திக்கிறார். ஆனால், அவர் உண்ணும் உணவு தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அருந்தும் பானம் தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அணியும் உடை தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; தடை செய்யப்பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கிறார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?” என்று கூறினார்கள்.

**நூல் : முஸ்லிம் (1844)**

**நன்மைகள் பறிபோகும்**

இந்த உலகத்தில் வரதட்சணை வாங்கியவர்கள் மறுமை நாளில் மிகப்பெரிய நஷ்டத்தை சந்திப்பார்கள். இவனால் பாதிக்கப்பட்ட பெண் வீட்டார் இவனுக்கு எதிராக அல்லாஹ்விடம் முறையிடுவார்கள்.

அப்போது இறைவன் இவனுடைய நன்மைகளை எடுத்து பாதிக்கப்பட்டவருக்கு வழங்குவான். இவனிடம் நன்மைகள் இல்லாவிட்டால் பாதிக்கப்பட்டவர் செய்த பாவங்களை இவன் தலையில் சுமத்துவான்.

4678حَدَّثَنَا قُتَيْبَةُ بْنُ سَعِيدٍ وَعَلِيُّ بْنُ حُجْرٍ قَالَا حَدَّثَنَا إِسْمَعِيلُ وَهُوَ ابْنُ جَعْفَرٍ عَنْ الْعَلَاءِ عَنْ أَبِيهِ عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ أَتَدْرُونَ مَا الْمُفْلِسُ قَالُوا الْمُفْلِسُ فِينَا مَنْ لَا دِرْهَمَ لَهُ وَلَا مَتَاعَ فَقَالَ إِنَّ الْمُفْلِسَ مِنْ أُمَّتِي يَأْتِي يَوْمَ الْقِيَامَةِ بِصَلَاةٍ وَصِيَامٍ وَزَكَاةٍ وَيَأْتِي قَدْ شَتَمَ هَذَا وَقَذَفَ هَذَا وَأَكَلَ مَالَ هَذَا وَسَفَكَ دَمَ هَذَا وَضَرَبَ هَذَا فَيُعْطَى هَذَا مِنْ حَسَنَاتِهِ وَهَذَا مِنْ حَسَنَاتِهِ فَإِنْ فَنِيَتْ حَسَنَاتُهُ قَبْلَ أَنْ يُقْضَى مَا عَلَيْهِ أُخِذَ مِنْ خَطَايَاهُمْ فَطُرِحَتْ عَلَيْهِ ثُمَّ طُرِحَ فِي النَّارِ رواه مسلم

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

(ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்), “திவாலாகிப்போனவன் என்றால் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்டார்கள். மக்கள், “யாரிடம் வெள்ளிக் காசோ (திர்ஹம்) பொருட்களோ இல்லையோ அவர்தான் எங்களைப் பொறுத்தவரை திவாலானவர்” என்று பதிலளித்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “என் சமுதாயத்தாரில் திவாலாகிப்போனவர் ஒருவராவார். அவர் மறுமை நாளில் தொழுகை, நோன்பு, ஸகாத் ஆகியவற்றுடன் வருவார். (அதே நேரத்தில்) அவர் ஒருவரைத் திட்டியிருப்பார். ஒருவர்மீது அவதூறு சொல்யிருப்பார். ஒருவரது பொருளை (முறைகேடாகப்) புசித்திருப்பார். ஒருவரது இரத்தத்தைச் சிந்தியிருப்பார். ஒருவரை அடித்திருப்பார். ஆகவே, அவருடைய நன்மைகளிருந்து சில இவருக்குக் கொடுக்கப்படும்; இன்னும் சில அவருக் குக் கொடுக்கப்படும். அவருடைய நன்மைகளிருந்து எடுத்துக் கொடுப்பதற்குமுன் நன்மைகள் தீர்ந்துவிட்டால், (அவரால் பாதிக்கப்பட்ட) மக்களின் பாவங்களிருந்து சில எடுக்கப்பட்டு, இவர்மீது போடப்படும். பிறகு அவர் நரக நெருப்பில் தூக்கியெறியப்படுவார் (அவரே திவாலாகிப்போனவர்)” என்று கூறினார்கள்.

**நூல் : முஸ்லிம் (5037)**

**திருப்பிக்கொடுத்து விடுங்கள்**

வரதட்சணை கொடுமையின் விபரீதத்தை அறியாத காலத்தில் யாராவது வரதட்சணை வாங்கியிருந்தால் அந்தப் பணத்தை பெண் வீட்டாரிடம் திருப்பித்தருவது அவருடைய கடமையாகும். பொருளுக்குரியவர்களிடத்தில் அதை திருப்பிக்கொடுத்துவிட்டால் மறுமைநாளில் இறைவனிடம் மாட்டிக்கொள்ளமாட்டோம்.

எனவே இவ்வுலகிலேயே செய்த பாவத்துக்கு பரிகாரத்தை தேடிக்கொள்ள வேண்டும் அநியாயமான முறையில் வாங்கிய வரதட்சணைப் பொருளை மாமனார் மாமியாரிடம் திருப்பிக்கொடுப்பதே இதற்கானப் பரிகாரமாகும். திருப்பிக்கொடுக்க முடியாவிட்டால் அவர்களிடம் மன்னிப்புக் கேட்டு அவர்களை திருப்திபடுத்த வேண்டும்.

6534حَدَّثَنَا إِسْمَاعِيلُ قَالَ حَدَّثَنِي مَالِكٌ عَنْ سَعِيدٍ الْمَقْبُرِيِّ عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ مَنْ كَانَتْ عِنْدَهُ مَظْلِمَةٌ لِأَخِيهِ فَلْيَتَحَلَّلْهُ مِنْهَا فَإِنَّهُ لَيْسَ ثَمَّ دِينَارٌ وَلَا دِرْهَمٌ مِنْ قَبْلِ أَنْ يُؤْخَذَ لِأَخِيهِ مِنْ حَسَنَاتِهِ فَإِنْ لَمْ يَكُنْ لَهُ حَسَنَاتٌ أُخِذَ مِنْ سَيِّئَاتِ أَخِيهِ فَطُرِحَتْ عَلَيْهِ رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒருவர் தம் சகோதரருக்கு அநீதி ஏதேனும் இழைத்திருந்தால் (அவருடன் சமரசம் செய்து) அதிலிருந்து அவர் (இவ்வுலகிலேயே) தம்மை விடுவித்துக் கொள்ளட்டும். ஏனெனில், அங்கு (மறுமையில் ஈட்டுத் தொகை கொடுக்க) பொற்காசோ, வெள்ளிக்காசோ இருக்காது. இவர் தம் சகோதரருக்கு (இழைத்த அநீதிக்கு ஈடாக) இவருடைய நன்மைகளிலிருந்து (தேவையான வற்றை) எடு(த்துக் கொடு)க்கப்படும்; இவரிடம் நன்மைகளே இல்லை என்றால், (அநீதிக் குள்ளான) சகோதரனின் பாவங்களிலிருந்து (விகிதாசாரப்படி) எடுத்து இவர் மீது சுமத்தப்(படும். இந்நிலை ஏற்)படுவதற்கு முன்பே (இம்மையில் சமரசம் செய்து கொள்ளட்டும்).

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**நூல் : புகாரி (6534)**

## அன்பளிப்பாக கொடுப்பது வரதட்சணையாகுமா?

அன்பளிப்பு வாங்குவதையும் அன்பளிப்பு கொடுப்பதையும் இஸ்லாம் தடைசெய்யவில்லை. ஆனால் இறைவன் தடைசெய்த காரியங்களை அன்பளிப்பு போல் சித்தரிப்பதை ஏற்றுக்கொள்ள முடியாது. இவ்விசயத்தில் மிக எச்சரிக்கையாகவும் பேணுதலாகவும் இருக்க வேண்டும். அன்பளிப்பிற்கும் வரதட்சணைக்கும் இடையே உள்ள வேறுபாட்டை புரிந்து நடந்துகொள்ள வேண்டும்.

யூதர்கள் வட்டித் தொழில் செய்து வந்தனர். வியாபாரமும் வட்டியும் ஒன்றுதான் எனக் கூறி இந்த பாவத்தை அவர்கள் நியாயப்படுத்தினர். அல்லாஹ் இதனை வன்மையாகக் கண்டிக்கிறான்.

வட்டியை உண்போர் (மறுமை நாளில்) ஷைத்தான் தீண்டியவனைப் போல் பைத்தியமாகவே எழுவார்கள். “வியாபாரம் வட்டியைப் போன்றதே” என்று அவர்கள் கூறியதே இதற்குக் காரணம். அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான்.

**அல்குர்ஆன் (2:275)**

அன்பளிப்பு என்பது தானாக மனமுவந்து கொடுப்பதாகும். அன்பளிப்பை கொடுப்பவருக்கும் வாங்குபவருக்கும் இடையில் இதில் எந்த ஒப்பந்தமும் இருக்காது. அன்பளிப்பை கொடுப்பவருக்கு இதில் சிறிதளவு கூட நெருக்கடியோ நிர்பந்தமோ இருப்பதில்லை.

தனக்கு பொருளை வழங்க வேண்டும் என வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ நெருக்கடி தரப்பட்டால் அப்போது இதை அன்பளிப்பு எனக் கூற முடியாது. மாறாக இது தடைசெய்யப்பட்ட காரியமாக ஆகிவிடும்.

உதாரணமாக கரீம் என்பவர் ரஹீம் என்பவரிடமிருந்து 50 ஆயிரம் ரூபாயை கடனாகப் பெறுகிறார். மூன்று மாதத்தில் இதேத் தொகையை மட்டும் திருப்பிக்கொடுக்க வேண்டும் என ஒப்பந்தம் செய்கின்றனர். கரீம் ரஹீமிடம் பணத்தை ஒப்படைக்கும் போது 5 ஆயிரம் ரூபாய் கூடுதலாக கொடுத்து மொத்தம் 55 ஆயிரம் ரூபாய் கொடுக்கிறார். இவர் கொடுக்கும் கூடுதலான 5 ஆயிரம் ரூபாயை அன்பளிப்பாகும். இது தவறல்ல. வரவேற்கத்தகுந்த காரியமாகும்.

ரஹீம் கடனை கொடுக்கும் போது திருப்பித்தரும் போது 5 ஆயிரம் ரூபாய் கூடுதலாகக் கொடுக்க வேண்டும் என கரீடம் கேட்டு அதனடிப்படையில் இருவருக்கும் இடையில் கொடுக்கல் வாங்கல் இருந்தால் அல்லது கரீம் ரஹீமிடம் நான் திருப்பித் தரும் போது 5 ஆயிரம் ரூபாய் கூடுதலாகத் தருகிறேன். எனக்கு கடன் கொடுங்கள் எனக் கேட்டால் இது வட்டியாகிவிடும். இங்கே வட்டிக்கும் அன்பளிப்பிற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை புரிய வேண்டும்.

இதுபோன்றே வரதட்சணைக்கும் அன்பளிப்பிற்கும் இடையே வித்தியாசம் உள்ளது. பெண் வீட்டார் எந்த நிர்பந்தமும் இல்லாமல் மாப்பிள்ளைக்கு அன்பளிப்பு வழங்கினால் அது

குற்றமல்ல. இந்த அடிப்படையில் தான் நபி (ஸல்) அவர்கள் தன் மறுமகன் அலீ (ரலி) அவர்களுக்கு பாய் தலையணை போன்ற சிறு பொருட்களை அன்பளிப்புச் செய்தார்கள்.

ஆனால் திருமணம் ஒப்பந்தம் நடக்கும் போதே மாப்பிள்ளைக்கோ அல்லது மாப்பிள்ளை வீட்டார்களுக்கோ அல்லது மணப்பெண்ணுக்கு குறிப்பிட்டதை கொடுக்க வேண்டும் என பேச்சு நடந்தால் அப்போது இது அன்பளிப்பல்ல. மாறாக இது தெளிவான வரதட்சணை ஆகும்.

மாப்பிள்ளை வீட்டாருக்கு பொருளைக் கொடுக்காவிட்டால் நமது மகளை சந்தோஷமாக வைத்திருக்கமாட்டார்கள் என்ற அச்சத்தினால் இன்றைக்கு பலர் வரதட்சணை கொடுக்கின்றனர். அன்பளிப்பு என்பது ஒருவர் தனக்கு இயன்றதை வழங்குவதாகும். ஆனால் வரதட்சணையில் தனது சக்திக்கு மீறி சிரமப்பட்டு பெருந்தொகையை மாப்பிள்ளைக்கு கொடுக்கப்படுகின்றது.

திருமணத்தின் போது மாப்பிள்ளைக்கு அன்பளிப்பு கொடுப்பது கட்டாயமான ஒன்றல்ல. பெண்வீட்டார் பெரும் அன்பளிப்புகளை எந்த நிர்பந்தமும் இல்லாமல் மாப்பிள்ளைக்கு கொடுத்தாலும் தற்போதுள்ள சமூகத்தில் அது வரட்சணையாகவே பார்க்கப்படும். மற்றவர்கள் நம்மை தவறாக நடக்கும் வகையில் நமது செயல்பாடு இருக்கக்கூடாது.

**சந்தேகமானதை விடுவோம்**

மேலும் ஒரு பொருளில் சந்தேகத்தின் சாயல் தென்பட்டால் அதை விட்டுத் தவிர்ந்து கொள்ளவதே ஈமானுக்கு பாதுகாப்பு.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அனுமதிக்கப்பட்டவையும் மிகத் தெளிவானவை. மேலும் அனுதிக்கப்படாதவையும் தெளிவானவையாய் இருக்கின்றன. இவ்விரண்டிற்கும் இடையில் சந்தேகத்திற்கு இடமானவையும் இருக்கின்றன. அவற்றை மக்களில் அதிகம் பேர் அறிய மாட்டார்கள். எனவே எவர் சந்தேகத்திற்கு இடமானவற்றைத் தவிர்த்துக் கொள்கிறாரோ அவர் தமது மார்க்கத்தையும் காப்பாற்றிக் கொள்கிறார்; மானத்தையும் காப்பாற்றிக் கொள்கிறார். எவர் சந்தேகத்திற்கிட மானவைகளில் தலையிடுகிறாரோ அவர், (அனுமதிக்கப்படாதவைகளில் தலையிடுகிறார்.) வேலியோரங்களில் (கால்நடைகளை) மேய்ப்பவர் வேலிக்குள்ளேயே (கால்நடைகளை) மேயவிட நேரும். எச்சரிக்கை! ஒவ்வொரு மன்னனுக்கும் ஓர் எல்லை இருக்கின்றது அல்லாஹ்வின் நாட்டில் அவனது எல்லை (வேலி) அவனால் தடை

விதிக்கப்பட்டவையே. அறிக: உடலில் ஒரு சதைத் துண்டு இருக்கிறது. அது சீர் பெற்றுவிட்டால் உடல் முழுவதும் சீர் பெற்றுவிடும். அது சீர்குலைந்துவிட்டால் முழு உடலும் சீர்குலைந்து விடும். அறிந்து கொள்ளுங்கள்: அதுதான் உள்ளம்.

**அறிவிப்பவர்: நுஅமான் பின் பஷீர் (ரலி), நூல்: புகாரி 52**

நபி (ஸல்) அவர்கள் சந்தேகமான எல்லா விஷயங்களையும் தடுப்பவர்களாக இருந்தார்கள்.

புவானா என்ற இடத்தில் ஒட்டகத்தை அறுத்துப் பலியிட வேண்டும் என்று ஒருவர் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் நேர்ச்சை செய்திருந்தார். அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “நான் புவானா என்ற இடத்தில் ஒட்டகத்தை அறுத்துப் பலியிட வேண்டும் என்று நேர்ச்சை செய்திருக்கின்றேன்” என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அதில் வணங்கப்படக் கூடிய அறியாமைக் கால சிலைகளில் ஏதேனும் ஒரு சிலை இருக்கின்றதா?” என்று (மக்களிடம்) கேட்டார்கள். அதற்கு (மக்கள்) இல்லை என்று பதிலளித்தார்கள். “அவர்களது திருவிழாக்களில் ஏதேனும் ஒரு திருவிழா அங்கு நடப்பதுண்டா?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர்கள் இல்லை என்று பதிலளித்தார்கள். “நீ உன்னுடைய நேர்ச்சையை நிறைவேற்றிக் கொள். ஏனெனில் அல்லாஹ்வுக்கு மாறு செய்வதிலோ அல்லது ஆதமுடைய மகனுக்கு இயலாத காரியத்திலோ நேர்ச்சையை நிறைவேற்றுதல் இல்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: ஸாபித் இப்னு ளஹ்ஹாக் (ரலி)**

**நூல்: அஹ்மத் 16012**

இந்த சம்பவத்தில் அறுத்துப்பலியிடுபவர் அல்லாஹ்வுக்காக பலியிட்டாலும் பலியிடப்படும் இடத்தில் சிலைகள் இருக்கின்றதா? என நபி வினவுகிறார்கள். ஏனென்றால் சிலைகள் இருந்து அங்கே அல்லாஹ்வுக்காக பலியிட்டாலும் சிலைகளுக்கு பலியிட்டதைப் போன்ற தோற்றம் ஏற்படும். ஒரு தீய செயலுக்கு ஒப்ப நடப்பது மார்க்கத்தில் தடை செய்யப்பட்டுள்ளது. எனவே நபி (ஸல்) அவர்கள் இதையும் தடைசெய்கிறார்கள்.

திருமணத்தில் அன்பளிப்பு என்று பெண் வீட்டார் சொல்வதும் இது போன்றதாகும். நடைமுறையில் இது தெளிவான வரதட்சணையாக தரப்படும் போது இதை அன்பளிப்பு என்ற பெயரில் வாங்குவது எந்த வகையில் நியாயம்?

சந்தேகமானதை விடுவதில் நபி (ஸல்) அவர்கள் சிறந்த முன்மாதிரியாக இருந்தார்கள்.

அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் :

நபி (ஸல்) அவர்கள் பாதையில் கிடந்த ஒரு பேரீச்சம் பழத்தைக் கடந்து சென்றார்கள். “இது ஸதகா (தர்ம)ப் பொருளாக இருக்குமோ என்ற அச்சம் எனக்கில்லாவிட்டால் இதை நான் தின்றிருப்பேன்” என்று கூறினார்கள்.

**(நூல்: புகாரி 2431)**

தர்மப் பொருள்கள் நபி (ஸல்) அவர்களுக்கு ஹராம். அதனால் கீழே கிடக்கின்ற பேரீச்சம் பழம் ஸதகவாக இருக்குமோ என்று அவர்களுக்குச் சந்தேகம் வந்ததால் அதைவிட்டு விலகிவிட்டார்கள்.

திருமணத்தை ஒட்டி மாப்பிள்ளைக்கு பெண்வீட்டாரிடமிருந்து பொருள் தரப்பட்டால் அது உண்மையில் அன்பளிப்பாக இருப்பதைக் காட்டிலும் வரதட்சணையாக இருப்பதற்கே அதிக சாத்தியக்கூறுகள் உள்ளது. இந்த அன்பளிப்பு வரதட்சணையாக இருக்குமோ என்று சந்தேகம் வந்தாலே அதை வாங்கக்கூடாது.

அதே நேரத்தில் திருமணம் முடிந்து ஐந்தாறு வருடங்கள் கழித்து இதுபோன்ற அன்பளிப்புக்களைக் கொடுத்தால் அதை வாங்கிக் கொள்வதில் தவறில்லை. அது அன்பளிப்பு தான். இது திருமணத்திற்காகக் கொடுக்கப்பட்டதில்லை. மாறாகக் குடும்பத்தில் ஒருவர் என்ற முறையில் கொடுக்கப்பட்டதாகும்.

நமது உள்ளங்களை அல்லாஹ் நன்கறிந்தவன். ஒருவர் வரதட்சணையை அன்பளிப்பு எனக் கூறி நியாயப்படுத்தினால் உலக மக்களை அவர் ஏமாற்றிவிட்டதாக நினைத்தாலும் அல்லாஹ்விடம் அவர் பதிலளிக்க வேண்டும் என்பதை மறந்துவிடக்கூடாது.

**பெண் வீட்டார் பெண்ணுக்கு நகை போடலாமா?**

மாப்பிள்ளை வீட்டாரின் வற்புறுத்தல் எதுவுமின்றி தந்தை தன் மகளுக்கு திருமணத்தில் அன்பளிப்புச் செய்வது தவறல்ல. நபி (ஸல்) அவர்கள் தனது மகள் ஸைனப் (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பு கொடுத்துள்ளார்கள்.

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

மக்காவாசிகள் கைதி(களாக இருந்த தங்களது உறவினர்)களுக்காக பிணைத் தொகையை அனுப்பிய போது ஸைனப் (ரலி) அவர்கள் (தனது கனவர்) அபுல் ஆஸ் அவர்களுக்காக செல்வத்தை பிணைத் தொகையாக அனுப்பி வைத்தார்கள். அச்செல்வத்துடன் அவர்களுடைய கழுத்து மாலை ஒன்றையும் சேர்த்து அனுப்பியிருந்தார்கள். அம்மாலை (இதற்கு முன்பு) கதீஜா (ரலி) அவர்களிடம் இருந்தது. கதீஜா (ரலி) அவர்கள் அந்த மாலையுடன் ஸைனப் (ரலி) அவர்களை அபுல் ஆஸிடம் அனுப்பி வைத்தார்கள். அந்த மாலையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பார்த்தவுடன் கதீஜா (ரலி) அவர்களை நினைத்து கடுமையாக மனம் இளகினார்கள். மேலும் (நபித்தோழர்களிடம்) ஸைனபுக்குரிய கைதியை அவருக்காக நீங்கள் விடுதலை செய்து அவருக்குரிய (செல்வத்)தை அவரிடமே திருப்பி அனுப்பலாம் என நீங்கள் கருதினால் (அவ்வாறு செய்யுங்கள்) என்று கூறினார்கள். நபித்தோழர்கள் ஆம் (அவ்வாறே செய்கிறோம்) என்றனர். ஸைனப் (ரலி) அவர்களைத் தன்னிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபுல் ஆஸிடம் உடன்படிக்கை எடுத்திருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைத் பின் ஹாரிஸாவையும் ஒரு அன்சாரித் தோழரையும் அனுப்பி நீங்கள் இருவரும் யஃஜஜ் என்ற பள்ளத்தாக்கில் இருங்கள். உங்களை ஸைனப் கடந்து சென்றால் அவரை உங்களுடன் சேர்த்துக் கொண்டு வந்துவிடுங்கள் என்று கூறினார்கள்.

நூல் அஹ்மத் 25158

மகள் தன் தந்தையிடம் விரும்பியதைக் கேட்டுப் பெறுவதும் தறவல்ல. நபி (ஸல்) அவர்கள் தனது மகள் ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் நீ விரும்பியதை என்னிடம் கேள். தருகிறேன் என்று கூறியுள்ளார்கள்.

முஹம்மதின் மகள் ஃபாத்திமாவே! என் செல்வத்திலிருந்து நீ விரும்பியதைக் கேள் (தருகிறேன்). (ஆனால்,) அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து என்னால் சிறிதளவும் உன்னை காப்பாற்ற முடியாது" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா ரலி–) நூல் : புகாரி (2753)**

மாப்பிள்ளை வீட்டார் மணமகளுக்கு இவ்வளவு நகை போட வேண்டும் என பெண் வீட்டாரைக் கட்டாயப்படுத்துகின்றனர். இந்த அடிப்படையில் தந்தை தன் மகளுக்கு நகைகளை வாங்கிக் கொடுத்தால் இது அன்பளிப்பாகாது. மாறாக அன்பளிப்பு என்ற பெயரில் வாங்கப்படும் வரதட்சனையாகும்.

அன்பளிப்பு என்பது தந்தை தானாக விரும்பிக் கொடுப்பதாகும். அவர் விரும்பினால் கொடுப்பதற்கும் கொடுக்காமல் இருப்பதற்கும் உரிமை உள்ளது. எவ்வளவு அன்பளிப்புச் செய்ய வேண்டும் என்பதையும் தந்தையே தீர்மானிப்பார். உங்கள் மகளுக்கு நீங்கள் நகை போட வேண்டும். அந்த நகை இவ்வளவு இருக்க வேண்டும் என்று கேட்பதற்கு மாப்பிள்ளை வீட்டாருக்கு எந்த உரிமையும் இல்லை.

ஆனால் இவர்கள் இவ்வாறு கேட்கிறார்கள் என்றால் இவள் நம்முடைய வீட்டுக்கு வர இருக்கின்றாள். இவள் அதிகமான நகையுடன் வந்தால் பிறகு அந்த நகைகளை நாம் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நப்பாசையே இதற்குக் காரணம். எனவே இப்படிக் கேட்பவர்கள் வரதட்சணையே கேட்கின்றனர். இதனடிப்படையில் தந்தை மகளுக்கு நகைபோட்டால் தந்தை மகளுக்கு செய்யும் அன்பளிப்பு என்ற போர்வையில் வாங்கப்படுகின்ற வரதட்சனையாகும்.

**சீர் வரிசையும் வரதட்சணையே**

பெண் வீட்டாரிடமிருந்து பணம் வாங்குவது மட்டுமே வரதட்சணை என்றும் டிவி ஃபிரிட்ஜ் பாத்திர பண்டங்கள் என பொருளாக வாங்கினால் இது வரதட்சணை இல்லை என்றும் பலர் கருதுகின்றனர். இது தவறாகும்.

பெண்வீட்டாரிடமிருந்து பணமாக வாங்கினாலும் பொருளாக வாங்கினாலும் வாங்கப்படும் அனைத்தும் வரதட்சணையாகும். பெண்வீட்டார் கடைகளில் பணத்தை கொடுத்துத் தான் இந்தப் பொருட்களை வாங்குகின்றனர்.

திருமணம் முடிந்து பெண்ணை கணவனின் வீட்டுக்கு அனுப்பும் போது வீட்டுக்குத் தேவையான பொருட்களை பெண்வீட்டார் கொடுத்து அனுப்புகின்றனர். இது நடைமுறையில் சீர்வரிசை என்று சொல்லப்படுகின்றது. மணப்பெண் வசதியாக வாழ வேண்டும் என்பதற்காகத் தான் சீர்வரிசை வழங்கப்படுகின்றது. இதில் என்ன தவறு உள்ளது? என்று சிலர் கேட்கின்றனர்.

தன் வீட்டுக்கும் தன் மனைவிக்கும் தேவையான பொருளை வாங்கித் தருவது கணவனின் கடமை. இது பெண்ணின் கடமையல்ல. கணவன் சம்பாத்தியத்தில் அவன் வாங்கித் தந்தப் பொருட்களை பாதுகாப்பது தான் மனைவியின் கடமை. மேலும் இந்த சீர்வரிசைப் பொருட்களை மனைவி மட்டுமின்றி இவனும் பயன்படுத்துகிறான். எனவே இது தெளிவான வரதட்சணையாகும்.

## பெண்வீட்டு விருந்தும் வரதட்சணையே

வரதட்சனை வாங்குவது எவ்வாறு மார்க்கத்திற்கு முரணான காரியமோ அது போன்று பெண்வீட்டு விருந்தும் மார்க்கத்திற்கு முரணாண காரியமாகும்.

ஆண் பெண்ணுக்கு மனக்கொடை கொடுக்க வேண்டும் என்று இஸ்லாம் உத்தரவிடுகின்றது. பெண்ணிடமிருந்து எதையும் வாங்கக் கூடாது என்ற தடை இந்த உத்தரவில் அடங்கியிருக்கின்றது.

இதே போன்று திருமணத்துக்கென்று வலீமா என்ற விருந்தை ஆண் கொடுக்க வேண்டும் என்று இஸ்லாம் உத்தரவிடுகின்றது. பெண் வீட்டு விருந்து கூடாது என்ற தடை இந்த உத்தரவில் அடங்கியிருக்கின்றது.

திருமணத்தில் பெண் வீட்டார் மீது எந்தச் செலவையும் இஸ்லாம் சுமத்தவில்லை. ஆனால் இன்றைக்கு சமுதாயத்தில் பெண்வீட்டார் மீது தேவையற்ற சுமைகள் சுமத்தப்பட்டுள்ளன. இந்தச் சுமைகளை தங்களுடைய கடமைகளாக எண்ணிக் கொண்டு பெண் வீட்டினர் செய்து வருகின்றனர். இவற்றைச் செய்யாவிட்டால் சமுதாயத்தில் அது அவமானம் என்றோ மாப்பிள்ளை

வீட்டார் கோபப்படுவார்கள் என்றோ கருதி சிரமத்துடன் செய்பவர்களும் இருக்கின்றார்கள். பெண்வீட்டு விருந்து என்பது இந்தச் சுமைகளில் ஒன்றாகும்.

**ஊருக்காக பெண் வீட்டு விருந்து**

திருமணத்தில் மாப்பிள்ளை வீட்டார் தனியாகவும் பெண் வீட்டார் தனியாகவும் விருந்து போடும் வழக்கம் சில ஊர்களில் நடைமுறையில் உள்ளது. மாப்பிள்ளை வீட்டார் தனக்கு வேண்டியவர்களை அழைத்து தனியே விருந்து போடுவார். இது போன்று பெண் வீட்டார் தனக்கு வேண்டியவர்களை அழைத்து தனியாக விருந்து போடுவார்கள். இந்த முறையும் மார்க்கத்தில் தடைசெய்யப்பட்டதாகும்.

இஸ்லாமில் பெண் வீட்டு விருந்து என்பதே கிடையாது. திருமணத்தில் ஒரே ஒரு விருந்து முறையை மட்டுமே இஸ்லாம் கற்றுத் தந்துள்ளது. அது திருமணத்தை முன்னிட்டு மாப்பிள்ளை கொடுக்கும் வலீமா விருந்தாகும். இதைத் தவிர வேறு விருந்தை திருமணத்தில் இஸ்லாம் காட்டித் தரவில்லை.

ஆனால் இன்றைக்கு மாப்பிள்ளை கொடுக்க வேண்டிய வலீமாவைப் போன்று பெண் வீட்டு விருந்து என்பது திருமணத்தில் இன்றியமையாத ஒன்றாக ஆகிவிட்டது. இது இல்லாமல் திருமணம் இல்லை என்கின்ற அளவிற்கு சில ஊர்களில் எழுதப்படாத சட்டமாகவே இது சமூகத்தில் கடைபிடிக்கப்பட்டு வருகின்றது. எந்த அளவிற்கென்றால் பெண் வீட்டாருக்கும் சேர்த்து நாங்கள் விருந்தளிக்கின்றோம் என மாப்பிள்ளை வீட்டார் ஒத்துக் கொண்டால் கூட பெண் வீட்டார் இந்த விருந்தைக் கைவிடுவதில்லை. நடத்தியே தீர வேண்டும் என்று நினைக்கின்றனர்.

ஏனென்றால் பெண் வீட்டார் விருந்து போடா விட்டால் அது தனக்கும் தனது குடும்பத்துக்கும் கேவலம் என்று பெண் வீட்டார் கருதுகின்றனர். பெண் வீட்டார் தங்களுக்கு வேண்டியவர்களை அழைத்து திருமண விருந்து கொடுக்காவிட்டால் அவர்களைக் கஞ்சர்களாகவும் கேவலமாகவும் சமுதாயம் பார்ப்பதே இதற்குக் காரணம். எனவே தான் சக்தி உள்ளவர்களும் சக்தி இல்லாதவர்களும் இந்த விருந்தை எப்பாடுபட்டாவது நடத்தி வருகின்றனர்.

வெளிநாட்டில் பல வருடங்களாக பாடுபட்ட சம்பாதித்த செல்வத்தை ஒரு நாளில் ஊருக்கெல்லாம் சாப்பாடு போட்டு அழித்துவிடுகிறான். ஊருக்கு சாப்பாடு போட வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் இப்படி யாரும் செலவழிக்கமாட்டான். திருமணத்தில் இவ்வாறு சாப்பாடு போடுவது கடமையாகும். போடாவிட்டால் ஊர் அசிங்கமாக பேசும் என்ற நிர்பந்தத்தின் காரணமாகவே இவ்வாறு செய்கிறான்.

இத்தகைய பெண்வீட்டு விருந்து என்பது வரதட்சணையை விட கொடுமையானதும் கொடூரமானதாகும். மணப்பெண்ணின் வாழ்க்கைக்கு பொறுப்பேற்றுக் கொள்ளும் கணவன் பெண் வீட்டாரிடம் எதையும் கேட்டு வாங்குவதே கூடாது என்கிற போது மணப் பெண்ணுக்கு எந்த வகையிலும் பலன் தராத ஊர் மக்கள் பெண் வீட்டாரிடமிருந்து உணவை எதிர்பார்ப்பது நிச்சயம் வரதட்சணையை விட கொடுமையானது தான். எனவே பெண் வீட்டு விருந்து என்பது ஒருவரின் பொருளை அநியாயமான முறையில் உண்பதற்குச் சமமான குற்றமாகும்.

**வரதட்சணையை ஒழிக்க வழி**

சமுதாயத்தில் ஒவ்வொருவரும் நினைத்தால் வரதட்சணையை எளிதில் ஒலித்துவிடலாம். திருமணம் என்பது அனைவரின் வாழ்விலும் இன்றியமையாத நிகழ்வாகும். மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் திருமணம் செய்தாக வேண்டிய கட்டாயம் உள்ளது. இந்த திருமணத்தில் வரதட்சணைக்கு எதிரான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

ஆணாக பிறந்த ஒவ்வொருவரும் என்னுடைய திருமணத்தில் நான் வரதட்சணை வாங்க மாட்டேன் என உறுதிமொழி எடுக்க வேண்டும். பெற்றோர்கள் வரதட்சணை வாங்கச் சொன்னாலும் இந்த பாவமான விசயத்தில் பெற்றோர்களுக்கு கட்டுப்படக்கூடாது என்ற உறுதிப்பாட்டுடன் இருக்க வேண்டும்.

பெண்ணாகப் பிறந்த ஒவ்வொருவரும் வரதட்சணை கேட்டு வருபவனை திருமணம் செய்ய மாட்டேன் என உறுதிமொழி எடுக்க வேண்டும். வரதட்சணை கேட்கும் கோழைகளுக்கு எங்கள் பெண்ணை திருமணம் செய்து கொடுக்கமாட்டோம் என பெண்வீட்டார் மாப்பிள்ளையின் முகத்தில் அறைந்தார்போல் கூற வேண்டும்.

வரதட்சணை வாங்கி நடத்தப்படும் திருமணங்களை முற்றிலுமாக புறக்கணிக்க வேண்டும். நெருங்கிய இரத்தபந்த உறவினரின் திருமணமாக இருந்தாலும் அல்லாஹ்வுக்காக அதை வெறுத்து புறக்கணிக்க வேண்டும்.

அப்போது தான் வரதட்சணை வாங்கியவர்கள் தாங்கள் செய்த தவறை உணருவார்கள். இனி அந்த பாவத்தை செய்வதற்கு வெட்கப்படுவார்கள். இவ்வாறு சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவரும் வரதட்சணை ஒழிய பங்காற்ற முடியும்.

**வரதட்சணைத் திருமணங்களை புறக்கணிப்போம்**

வரதட்சணை என்பது ஒரு சமூகக் கொடுமை என்பதை யாரும் மறுக்க முடியாது. இதுபோன்ற தீமைகளை நாம் கடுமையாக வெறுக்க வேண்டும்.

மனிதாபிமானமற்ற முறையில் பெண் வீட்டில் வரதட்சணை வாங்குகின்ற இந்தப் பேடிகளிடம் இதைத் தீமை என்று உணர்த்துவது எப்படி? அவன் தருகின்ற விருந்தைச் சாப்பிட்டு விட்டு உணர்த்த முடியுமா? என்பதைச் சிந்திக்க வேண்டும். இது ஒரு சமூகக் கொடுமை என்பதை உணர வைப்பதற்காக இந்தத் திருமணங்களைப் புறக்கணிக்க வேண்டும்.

உங்களில் ஒருவர் ஒரு தீமையைக் கண்டால் அவர் அதைத் தமது கரத்தால் தடுக்கட்டும். முடியாவிட்டால் தமது நாவால் (தடுக்கட்டும்) அதுவும் முடியாவிட்டால் தமது உள்ளத்தால் (வெறுத்து ஒதுங்கட்டும்) இந்த நிலையானது இறை நம்பிக்கையின் பலவீனமா(ன நிலையா)கும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்.

**அறிவிப்பவர்: அபூஸயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல்: முஸ்லிம் 70**

**பெண்களும் காரணம்**

சமுதாயத்தில் வரதட்சணை கொடுமை பரவ ஆண்கள் மட்டும் காரணமில்லை. பெண்களும் காரணமாக இருக்கின்றனர். மாப்பிள்ளையின் தாயார் ஒரு பெண்ணாக இருந்தும் வரதட்சணையால் பெண் படும் கஷ்டத்தை உணர்ந்திருந்தும் வாய் கூசாமல் எவ்வளவு

தருவீர்கள் என்று பெண்வீட்டாரிடம் கேட்கிறாள். தனது மகனுக்கு திருமணம் செய்து வைக்கும் போது வரதட்சணை கேட்பது தன்னுடைய உரிமை என்று நினைக்கிறாள்.

மாப்பிள்ளையின் சகோதரிகள் வரதட்சணையின் விபரீதத்தை நன்கு உணர்ந்திருப்பார்கள். இவர்களுக்கு திருமணம் செய்து வைக்க பெற்றோர்கள் பட்ட பாட்டையும் புரிந்திருப்பார்கள். ஆனால் அண்ணனுடைய திருமணத்தில் பெண் வீட்டாரை கசக்கிப்புளிவதில் இவர்களும் கூட்டாளிகளாக இருக்கின்றார்கள்.

மாப்பிள்ளை வீட்டார் வரதட்சணை கேட்காவிட்டால் பெண்வீட்டார் மாப்பிள்ளையை கட்டாயப்படுத்தி வரதட்சணை வாங்க வைக்கும் நிழ்வுகளும் உள்ளது. எனவே இது போன்ற பெண்கள் திருந்தினால் தான் வரதட்சணையை ஒழிக்க முடியும்.

**நிர்பந்தம் ஏற்பட்டால்...**

வரதட்சணைக்கு மார்க்கத்தில் அனுமதி இல்லை என்பதில் இரண்டாவது கருத்துக்கு இடமில்லை என்றாலும் சமுதாயத்தில் மாப்பிள்ளை கிடைக்காமல் காத்திருக்கும் பெண்களின் நிலையை நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

ஆண்டுகள் பல கடந்தாலும் வரதட்சணை இல்லாமல் தனக்கு வாழ்க்கைத் துணை அமையாது என்ற நிலையில் பலப் பெண்கள் உள்ளனர்.

ஒரு பெண் தான் திருமணம் செய்யாவிட்டால் வழி தவற நேரும் என்று அவள் அஞ்சினால் அப்போது விபச்சாரத்தில் சென்று விடக் கூடாது என்பதற்காக வரதட்சணை கேட்பவனை மணந்து கொண்டால் கருணையுள்ள அல்லாஹ் அதை மன்னிப்பவனாக இருக்கிறான்.

அல்லாஹ்வை நம்பிய பின் அவனை மறுப்போர் மீதும், மறுப்பிற்கு உள்ளத்தில் தாராளமாக இடமளிப்போர் மீதும் அல்லாஹ்வின் கோபமும், கடும் வேதனையும் உண்டு. உள்ளத்தில் நம்பிக்கை வலுப்பெற்ற நிலையில் நிர்பந்திக்கப் பட்டவர் தவிர.

**(அல்குர்ஆன் 16:106)**

இறை நிராகரிப்பு என்பது தான் அல்லாஹ்விடத்தில் மன்னிக்க முடியாத பாவமாகும். ஆனால் அதற்கே நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அல்லாஹ் இந்த வசனத்தில் விதி விலக்கு வழங்குகின்றான்.

பன்றி இறைச்சி மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட உணவு. அதையும் நெருக்கடி,நிர்ப்பந்தத்தின் போது சாப்பிட்டால் அல்லாஹ் மன்னித்து விடுகின்றான் என்பதைக் கீழ்க்கண்ட வசனம் விளக்குகின்றது.

தாமாகச் செத்தவை, இரத்தம், பன்றியின் இறைச்சி, அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப் பட்டவை ஆகியவற்றையே அவன் உங்களுக்குத் தடை செய்துள்ளான். வரம்பு மீறாமலும்,வலியச் செல்லாமலும் நிர்பந்திக்கப் படுவோர் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

**(அல்குர்ஆன் 2:173)**

**பணம் கொடுத்து உதவி செய்யலாமா?**

மாப்பிள்ளை வீட்டாருக்கு வரதட்சணை கொடுப்பதற்காக பெண் வீட்டார் நம்மிடம் உதவி கேட்டால் உதவி செய்யலாமா? என்ற சந்தேகம் பலருக்கு உள்ளது.

நல்ல காரியத்துக்கு யார் உதவி கேட்டாலும் கண்டிப்பாக உதவ வேண்டும். ஆனால் பாவமான காரியத்திற்கு உதவி செய்யுமாறு கேட்டால் உதவக்கூடாது. பாவமான காரியத்திற்கு துணை நிற்பதும் பாவமான செயலாகும்.

நன்மையிலும், இறையச்சத்திலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுங்கள்! பாவத்திலும், வரம்பு மீறலிலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளாதீர்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! அல்லாஹ் கடுமையாகத் தண்டிப்பவன்.

**(அல்குர்ஆன் 5:2)**

அதே நேரத்தில் பெண்ணுக்கு ஆடை வாங்குவது நகை வாங்குவது போன்ற செலவுகளுக்காக உதவி கேட்டால் இதற்கு தாராளமாக உதவலாம். ஏனென்றால் பெண்ணுக்கு

செலவழிப்பது வரதட்சணை இல்லை. மேலும் தானாக வழியச் செல்லாமல் வரதட்சணை கொடுக்க வேண்டிய நிர்பந்தம் உள்ள பெண்களுக்கு நாம் உதவுவதும் தவறல்ல.

அல்லாஹ் நமது இஸ்லாமிய சமுதாயத்தை மற்ற சமூகங்களுக்கு முன்மாதிரியாகத் திகழும் சிறந்த சமுதாயமாக ஆக்குவானாக.